Licensed to Post Without Pre-Payment Licence No G 6[illegible] N MS CPP 55 — ANNA Leading Progressive Tamil Daily to the [illegible]

# குண்டுவீச்சு: துப்பு துலங்கியது

Regd. No. TN - MS [C] 244 — 420212 — 16 பக்கம் விலை 100 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 20 8 87 வியாழன் வெளியூர் வெள்ளி 21 8 87 இதழ் 300

## சிங்கள வெறியர்களின் ரகசியகட்சி நாசவேலை

## ராஜீவ்காந்தி-ஜெயவர்த்தனேயை கொல்ல முயன்ற சதி அம்பலம்

கொழும்பு. ஆக 20- சிங்கள வெறிக்கும்பல் ஒன்று புதிய அரசியல் அமைப்பை உருவாக்கியுள்ளது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. கொழும்புவில் பிரதமர் ராஜீவ்காந்தியை கொல்ல நடந்த முயற்சிக்கும் பின்னர் ஜெயவர்த்தனேயை கொல்ல நடந்த முயற்சிக்கும் இந்த சிங்கள அமைப்பே காரணம் என்று தெரிகிறது.

இந்திய-இலங்கை ஒப்பந்தத்தில் கையெழுத்திட பிரதமர் ராஜீவ்காந்தி கொழும்புக்குச் சென்றார் அல்லவா?

கொழும்பில் அணிவகுப்பு மரியாதையை ஏற்றபோது இலங்கை கடற்படை சிப்பாய் ஒருவன் பிரதமர் ராஜீவ் காந்தியை கொல்ல முயன்றான் பிரதமரின் கழுத்தில் துப்பாக்கி அடிவிழுந்தது.

அவ்வாறு தாக்கிய சிங்கள சிப்பாய் கைது செய்யப்பட்டு விசாரணை நடக்கிறது.

கடந்த செவ்வாய்க்கிழமை இலங்கை நாடாளுமன்றக் கூட்டம் நடந்தது முன்னதாக இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே தலைமையில் ஆளும்கட்சி எம். பி. க்கள் கூட்டம் நடந்தது கூட்டத்திற்குள் வெடி குண்டுகள் வீசப்பட்டன இதில் பாதுகாப்பு அமைச்சர் அதுலத்முதலி படுகாயம் அடைந்தார்

பிரதமர் பிரேமதாசாவுக்கு காலில் காயம் ஏற்பட்டது மற்றும் பல எம்பிக்களுக்கு காயம் ஏற்பட்டது

உதவி அமைச்சர் அபே விக்ரம குண்டு வீச்சு காரணமாக மரணம் அடைந்துள்ளார்

### காரணம் என்ன?

குண்டுவீசியவர்கள் யார் என்பது குறித்து தீவிர புலன் விசாரணை நடக்கிறது

சம்பத்தில் சிங்கள வெறியர்கள் சிலர் சேர்ந்து 'தேசப்பற்றுமிக்க மக்கள் முன்னணி' என்ற ஒரு ரகசிய அமைப்பை உருவாக்கி இருக்கிறார்களாம் அதில் 5 ஆயிரம் போர் உறுப்பினர்களாக இருக்கிறார்கள்.

இந்த இயக்கத்தின் நோக்கம் இந்திய-இலங்கை உடன்பாட்டை சீர்குலைப்பது சமாதானப் படையாக இலங்கையில் இருக்கும் இந்தியப் படையை இந்தியாவுக்குத் திரும்பி போகச் செய்வது இந்த இரு நோக்கங்களுக்காக இந்த ரகசிய இயக்கம் செயல்படுவதாக புலனாய்வுத்துறை கண்டு பிடித்துள்ளது

இந்த இயக்கத்திலுள்ள வெறியர்கள் மற்ற கட்சிகள் நிறுவனங்களில் ரகசியமாக ஊடுருவி இருக்கிறார்கள்

இந்திய இலங்கை ஒப்பந்தம் கையெழுத்தாகிற சமயத்தில் அந்த ஒப்பந்தத்தை எதிர்த்து இந்த இயக்கம் சுவரொட்டிகளை வெளியிட்டிருந்தது

'உடன்பாட்டை ஆதரித்து குரல் எழுப்புவோருக்கு மரணதண்டனை' என்று சிங்களத்தில் சுவரொட்டி அச்சிட்டு ஒட்டியிருந்தார்கள்

இந்த இயக்கத்திற்கு சிங்களத்தில்தேச பிரேமி ஜனதாப் பெரமுனா என்று பெயர்

இந்த இயக்கத்திலுள்ள வெறியர்கள் ராணுவத்திலும் ஊடுருவி இருப்பதாக கூறப்படுகிறது அணிவகுப்பின் போது பிரதமர் ராஜீவை தாக்கிய சிங்கள சிப்பாய் இந்த இயக்கத்தைச் சேர்ந்தவன் தான் என்பது இப்போது தெரிய வந்துள்ளது

### 42 பேரை கொன்றவராம்

அந்த இயக்கத்தை சேர்ந்த ஒருவர் கொழும்பிலுள்ள பிரிட்டிஷ் ஒலிபரப்பு கழக நிருபர் ஒருவருக்கு போன்செய்தார்

நாடாளுமன்றத்தில் வெடிகுண்டு வீசியது எங்கள் இயக்கம்தான் என்று அவர் கூறினார் அவர் தனது பெயரை சொல்லமறுத்து விட்டார் ஆங்கிலம் நன்றாகப் பேசினார்

ராஜீவ்காந்தி கொழும்புக்கு வந்த சமயத்தில் எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த சிங்களவர்கள் 42 பேரை பாதுகாப்பு படையினர் சுட்டுகொன்று விட்டார்கள் என்று நிருபரிடம் அந்த ஆசாமி கூறினார்

ஜெயவர்த்தனே துரோகம் செய்து விட்டார் இந்தியாவுக்கும் விடுதலை புலிகளுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை என்றும் அவர் கூறியுள்ளார்.

அதனால்தான் எங்கள் இயக்கத்தை சேர்ந்த ஒருவர் நாடாளுமன்ற ஊழியர்கள்போல வேடமிட்டு சென்று வெடிகுண்டு வீசினார்கள் என்றும் அந்த நபர் சொல்லிஇருக்கிறார்



## உடன்பாடு: இலங்கை ஜனாதிபதி உறுதி

கொழும்பு ஆக 20- வெடிகுண்டு வீசி தன்னைக் கொல்ல முயற்சிப்பதன் மூலம் இந்திய இலங்கை உடன்பாட்டை அமல் படுத்துவதிலிருந்து தன்னை நிறுத்திவிட முடியாது என்று அதிபர் ஜெயவர்த்தனே கூறி இருக்கிறார்:

இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை எதிர்த்து சிங்கள மக்களை ஒரு சிலர் தூண்டி விட்டிருப்பதால் அங்கு வன்செயல்கள் நடந்து வருகின்றன வன்முறையின் உச்சகட்டமாக இலங்கை நாடாளுமன்ற கட்டிடத்திற்குள்ளேயே வெடிகுண்டு வீசப்பட்டது

அதிபர் ஜெயவர்த்தனேவை கொல்ல நடந்த இந்த முயற்சியிலிருந்து அவர் உயிர் தப்பினார் அதுலத்முதலி உள்ளிட்ட சில அமைச்சர்கள் காயம் அடைந்தனர்

இந்த சம்பவம் குறித்து அதிபர் ஜெயவர்த்தனே கூறுகையில் வெடிகுண்டு வீசிதன்னைக் கொல்ல நினைப்பதன் மூலம் இந்திய இலங்கை ஒப்பந்தத்தைதான் அமல் படுத்துவதைதடுத்து விட முடியாது என்று தெரிவித்தார்

## ராஜீவ் பிறந்த நாள்: புரட்சித்தலைவர் வாழ்த்து

சென்னை ஆக 20- பிரதமர் ராஜீவ் காந்தியின் 44 வது பிறந்த நாளையொட்டி அவருக்கு முதல்வர் புரட்சி தலைவர் வாழ்த்துச்செய்தி அனுப்பி இருக்கிறார்

முதல்வர் புரட்சித் தலைவர் அமெரிக்காவில் நியூயார்க் நகரிலிருந்து டெலக்ஸ்மூலம் அனுப்பிய வாழ்த்துசெய்திவருமாறு:

44 வது பிறந்தநாளில் என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன் நீங்கள் இந்த நாட்டின் பிரதமராகப் பதவி ஏற்றதுமுதல் காந்தி நேரு இந்திரா ஆகியோரின் கொள்கைகளை நிறைவேற்றுவதற்காக நீங்கள் ஓய்வு இல்லாமல் உழைத்து வருகிறீர்கள்

### இலங்கை ஒப்பந்தம்

நீங்கள் பல பிரச்சினைகளை வெற்றிகரமாக சமாளித்து இருக்கிறீர்கள் சர்வதேசப் பிரச்சினைகளில் இந்தியாவின் கவுரவத்தை உயர்த்தி இருக்கிறீர்கள் நடுநிலை நாடுகளின் தலைமையாக இந்தியா திகழ்கிறது.

சர்வதேச அரசியலில் இந்திய இலங்கை ஒப்பந்தம் ஒரு சாதனைக் கல்லாகும்.

அது உங்கள் தலைமைக்கு கிடைத்த வெற்றிச் சின்னம் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதன்மூலம் இலங்கையில் அமைதி திரும்ப நீங்கள் உதவி இருக்கிறீர்கள்

நடுநிலை நாடுகள் இயக்கத்தில் இருந்து இலங்கை விலகிச் செல்லும் அபாயத்தையும் நீங்கள் தடுத்து இருக்கிறீர்கள் அகிம்சைத் தத்துவத்தின்சாதனையை உலகுக்கு எடுத்து காட்டி இருக்கிறீர்கள்.

இன்று நாடு பல பிரச்சினைகளை சந்தித்துக் கொண்டு இருக்கிறது பிரிவினை சக்திகளும் வன்முறையும் இந்தியாவின் ஒற்றுமைக்கு ஆபத்தாக தலை எடுத்து இருக்கின்றன

### வறட்சி

நாட்டின் பல பகுதிகள் வரலாறு காணாத அளவு வறட்சியின் பிடியில் சிக்கி இருக்கின்றன சிலபகுதிகள் வெள்ளத்தில் மூழ்கி இருக்கின்றன இந்த நிலைமை உங்களுக்குமிகப் பெரிய சவால் ஆகும் இதைச் சமாளிக்க என் ஒத்துழைப்பும் தமிழ் நாட்டுமக்களின் ஆதரவும் என்றும் உங்களுக்கு உண்டு.

### வாழ்த்து

என்சார்பாகவும் தமிழ் நாடு அரசு சார்பாகவும் தமிழ்நாட்டு மக்கள் சார்பாகவும் உங்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவிக்கொள்கிறேன் உங்களை ஆசீர்வதிக்கும்படி என் தாயிடமும் பிரார்த்திக்கிறேன்

சோனியா வோடு உங்கள் குடும்பத்தினரோடு ஆரோக்கியத்துடன் நீண்ட காலம் வாழ்ந்து இந்த நாட்டுக்கு தொடர்ந்து தலைமை தாங்க வேண்டும்

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தனது வாழ்த்துச் செய்தியில் கூறியிருக்கிறார்.



## உடன்பாட்டை ஏற்பேன்: சிரிமாவோ அறிவிப்பு

கொழும்பு ஆக 20 நான் ஆட்சிக்கு வந்தால் இந்திய இலங்கை உடன்பாட்டை ஏற்றுக்கொள்வேன் என்று இலங்கை எதிர்கட்சிதலைவர் சிரிமாவோ பண்டாரநாயகா கூறினார்

இலங்கைக்கு பாதகமான சிலஷரத்துக்களை மட்டும் நீக்குமாறு இந்தியாவை கேட்டுக் கொள்வேன் என்றார் சிரிமாவோ

## டி.சி.எம், ஆலையைமூட அரசு எதிர்ப்பு

புதுடெல்லி ஆக 20 டெல்லி [illegible] மூட அந்த நிர்வாகம் முடிவு செய்திருக்கிறது இதை [illegible] அரசு சுப்ரீம் [illegible]

## புரட்சித்தலைவர் தாயகம் திரும்புவது பற்றி நாவலர்

சென்னை. ஆக 20- முதல்வர் புரட்சித் தலைவர் மருத்துவ பரிசோதனையை முடித்து இம்மாத கடைசியில் அல்லது அடுத்த மாத முதல் வாரத்தில் தமிழகம் திரும்பக்கூடும் என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களிடம் கூறினார்

முதல்வர் புரட்சித் தலைவருடன் இரண்டு முறை தொலைபேசியில் பேசினேன் அவர் உற்சாகமாக இருக்கிறார் என்றும் நாவலர் கூறினார்

தெலுங்குகங்கை திட்டம் குறித்து ஆந்திர அமைச்சர் சொல்லி இருக்கும் தகவல் பற்றி நாவலரிடம் கேட்ட போது இது பற்றிய எல்லா விவரங்களையும் சட்டப் பேரவையில் தெளிவாகச் சொல்லி இருக்கிறோம் என்றார்

## ராஜீவ் பிறந்தநாள்: தம்பித்துரை வாழ்த்து

புதுடெல்லி ஆக 20 பிரதமர் ராஜீவ் காந்தியின் 44 வது பிறந்த தின விழாவை ஒட்டி அவருக்கு வாழ்த்துக்கள் குவிந்தன நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை நேரில் சென்று கொடுத்து அதிமுக சார்பில் வாழ்த்துக் கூறினார்

[illegible] வழக்கு [illegible] மத்திய [illegible] நல அமைச்சர் [illegible] தெரிவித்தார்

## இலங்கை விபத்து: தமிழக வீரர் குடும்பத்திற்கு புரட்சிதலைவர் நிதியுதவி

சென்னை, ஆக. 20 இலங்கையில் கண்ணி வெடி வெடித்ததால் இறந்த தமிழகத்தைச் சேர்ந்த ராணுவ அதிகாரி திலீப்சிங் குடும்பத்துக்கு 1 லட்சம் ரூபாய் உதவிப்பணம் வழங்க முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார்

இலங்கையில் போர் நிறுத்தத்தை மேற்பார்வையிட இந்திய அமைதிப்படை சென்றுள்ளது அமைதிப்படையைச் சேர்ந்த மேஜர் திலீப் சிங் நாயக் சுபேதார் முகுந்தராவும் யாழ்ப்பாணம் குதியில் கண்ணி வெடியை அகற்றும் பணியில் ஈடுபட்டிருந்தபோது கண்ணி வெடி குண்டு வெடித்ததில் உயிர் இழந்தனர்

### முதல்வர் துயரம்

இந்த துயர செய்தியையும் அந்த இருவரது குடும்ப சூழ்நிலைகளையும் தற்போது அமெரிக்காவில் இருக்கும் முதல்வர் புரட்சித் தலைவர் அறிந்தார்.

அந்த இருவரது குடும்பத்தினருக்கும் ஆழ்ந்த அனுதாபங்களை தெரிவித்துக் கொள்வதுடன் மேஜர் திலீப்புடைய குடும்பத்திற்கு 1 லட்சம் ரூபாயும் நாயக் சுபேதார் முகுந்தராவ் குடும்பத்திற்கு 25 ஆயிரம் ரூபாயும் முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து வழங்குமாறு நியூயார்க்கில் இருந்து உத்தரவிட்டுள்ளார்

மேஜர் திலீப்சிங் சிதம்பரனார் மாவட்டம் சாயர்புரத்தை சேர்ந்தவர் அவர் பெற்றோர்கள் இலங்கையில் இருந்த போது யாழ்ப்பாணத்தில் 1954-ல் திலீப் சிங் பிறந்தார் அவருடைய தந்தை ஞானராஜ் ஜே. மானுவல் மகாஜன கல்லூரியில்பேராசிரியராக இருந்தார் திலீப்சிங்கிற்கு ஜெயா என்ற மனைவியும் பிரதி இந்திரா என்ற இரண்டு குழந்தைகளும் உள்ளனர்

### இறுதி சடங்கு

திலீப்சிங்கின் குடும்பம் இப்போது ஆந்திர மாநிலத்திலுள்ள ஐதராபாத்தில்வசிக்கிறது யாழ்ப்பாணத்தில் இருந்து அவர் உடல் ஐதராபாத்துக்கு கொண்டு போகப்பட்டு இறுதிச்சடங்குகள் அங்கே நடைபெற்றன.

## விபத்து கழக எம்.எல்.ஏ. காயம்- தந்தை மரணம்

சென்னை, ஆக 21- கார் விபத்தில் கழக எம் எல் ஏ அரிகுமார் படுகாயமுற்றார் அவரது தந்தை மரணம் அடைந்தார். பெரணமல்லூர் தொகுதி சட்டமன்ற கழக உறுப்பினர் அரிகுமார். சென்னையில் ஒரு திருமண விழாவில் கலந்துகொள்ள காரில் வந்து கொண்டிருந்தார் அவருடன் அவரது தந்தை ராமசந்திரன் மற்றும் உறவினர்களும் வந்தனர்

சுங்குவார் சத்திரம் அருகே கார் வந்த போது விபத்துக்குள்ளாகி ஒரு புளியமரத்தில் மோதியது இதில் கார் நசுங்கியது

எம்எல்ஏயின் தந்தை ராமச்சந்திரன் மரணம் அடைந்தார் அரிகுமார் படுகாயம் அடைந்தார் காரிலிருந்த உறவினர் ஸ்ரீபதிக்கும் காயம் ஏற்பட்டது மயங்கிய நிலையில் அரிகுமார் சென்னை பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார் அங்கு அவருக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்படுகிறது தகவல் அறிந்தது அமைச்சர் பஊச மருத்துவமனைக்குச் சென்று அரிகுமாரை பார்த்தார் தீவிர சிகிச்சைக்கு அமைச்சர் ஏற்பாடு செய்தார்

## தலைமைக் கழக அறிவிப்பு

# இதயதெய்வம் புரட்சித்தலைவர்

## பிறந்தநாள் விழா மற்றும் புரட்சித்தலைவர்

தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சி நடத்தி வருவதை ஒட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இதுவரை ஆற்றிய அரும் பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 25-8-1987 செவ்வாய்க்கிழமை

பொங்கலூர் ஒன்றியம்
கோவை புறநகர் மாவட்டம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு அ அருணாசலம்
அவர்கள்
கூட்ட ஏற்பாடு
திரு பொள்ளாச்சி வ ஜெயராமன்
அவர்கள்
கோவை புறநகர் மாவட்ட கழகச்செயலாளர்
திரு எஸ் பி லோகநாதன்
அவர்கள்
பொங்கலூர் ஒன்றிய கழகச் செயலாளர்

### 26-8-1987 புதன்கிழமை

நெய்க்காரப்பட்டி
பழனி ஒன்றியம்
அண்ணா மாவட்டம்
சிறப்புரை
திரு அன்வர் ராஜா
அவர்கள்
கழக ஆட்சிமன்றக்குழு உறுப்பினர்
மண்டபம் ஊராட்சி ஒன்றிய தலைவர்
திரு கே குப்புசாமி
பி.ஏ.,பி.எல்., எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச்செயலாளர்
கூட்ட ஏற்பாடு
திரு டி செல்லச்சாமி
அவர்கள்
பழனி ஒன்றிய எம் ஜி ஆர்
இளைஞர் அணித் தலைவர்
பழனி ஊராட்சி ஒன்றிய துணைத்தலைவர்
திரு எஸ் கே கே ஹக்கீம்
அவர்கள்
பழனி ஒன்றிய எம் ஜி ஆர்
இளைஞர் அணிச்செயலாளர்
ஆயக்குடி பேரூராட்சி தலைவர்
திரு கே கந்தசாமி
அவர்கள்
நெய்க்காரப்பட்டி பேரூராட்சித் தலைவர்

### 27-8-1987 வியாழக்கிழமை

பழனி நகரம்
அண்ணா மாவட்டம்
சிறப்புரை
திரு அன்வர்ராஜா
அவர்கள்
கழக ஆட்சிமன்றக்குழு உறுப்பினர்
மண்டபம் ஊராட்சி ஒன்றியத் தலைவர்
திரு கே குப்புசாமி
பி ஏ, பி. எல். எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
கூட்ட ஏற்பாடு
பழனி நகர அனைத்திந்திய
அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்

### 28-8-1987 வெள்ளிக்கிழமை

சென்னை
தியாகராயநகர்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு பண்ருட்டி எஸ் இராமச்சந்திரன்
அவர்கள்
கலைநிகழ்ச்சி
திரு ஈஸ்வரன் ஈஸ்வரி கலைக்குழுவினர்
கூட்ட ஏற்பாடு
திரு அரிசிகடை சி பாண்டியன்
அவர்கள்
தி நகர் பகுதி எம் ஜி ஆர்
இளைஞர் அணிச் செயலாளர்
மற்றும்
தி. நகர்ப்பகுதி அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

### 28-8-1987 வெள்ளிக்கிழமை

கழக கொடியேற்று விழா
சென்னை
ஆர் கே நகர் தொகுதி
3-வது வட்டம்
கழகக் கொடியேற்றுதல்
மாண்புமிகு அமைச்சர்
திரு அ அருணாசலம்
அவர்கள்
சிறப்புரை
திரு இ மதுசூதனன்
அவர்கள்
சென்னை மாவட்ட எம் ஜி ஆர் மன்ற செயலாளர்
கூட்ட ஏற்பாடு
திரு நா பெ நாகலிங்கம்
அவர்கள்
புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்றம்

### 28-8-1987 வெள்ளிக்கிழமை

கழகக் கொடியேற்றுவிழா
சென்னை
ஆர் கே நகர் தொகுதி
5 வது வட்டம்
கழகக் கொடியேற்றுதல்
மாண்புமிகு அமைச்சர்
திரு அ அருணாசலம்
அவர்கள்
சிறப்புரை
திரு இ மதுசூதனன்
அவர்கள்
சென்னை மாவட்ட எம் ஜி ஆர் மன்ற செயலாளர்

நிகழ்ச்சி ஏற்பாடு
திரு கே அய்யனார்
அவர்கள்
செயலாளர் காவிய கலைமன்னன்
எம் ஜி ஆர் மன்றம்

### 29-8-1987 சனிக்கிழமை

பாளப்பட்டி
திருச்சி மாவட்டம்
சிறப்புரை
திரு எஸ் ஜெகதீசன்
எம்.எல்.ஏ அவர்கள்
அரவக்குறிச்சி தொகுதி சட்டமன்ற உறுப்பினர்
திரு சா லியாகத அலிகான்
பி ஏ., எல் எல் பி அவர்கள்
கழக மாணவர் அணிச் செயலாளர்
கூட்ட ஏற்பாடு
திரு என் எஸ் கிருஷ்ணன்
பி.ஏ. அவர்கள்
கழக மாணவர் அணி

### 31-8-1987 திங்கட்கிழமை

பழனி நகரம்
அண்ணா மாவட்டம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு ஆர் சவுந்தரராசன்
பி காம் அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு பி கே சின்னத்துரை
அவர்கள்
மாநில கதர்வாரிய உறுப்பினர்
திரு பி குமாரசாமி
பி எஸ்ஸி,, பி எல் அவர்கள்
பழனி நகர கழகச் செயலாளர்
கூட்ட ஏற்பாடு
அண்ணா கிளாஸ் தொழிலாளர் சங்கம்
பழனி

### 31-8-1987 திங்கட்கிழமை

திருமருகல் ஒன்றியம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு டி இராமசாமி
அவர்கள்
திரு அ பெ பால் ராஜ்
அவர்கள்
கிழக்குத் தஞ்சை மாவட்ட கழகச்செயலாளர்
திரு பாப்பா சுப்பிரமணியன்
எம் எல் ஏ அவர்கள்
குத்தாலம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்
கூட்ட ஏற்பாடு
திரு எஸ் ஆசைமணி
பி எஸ்ஸி அவர்கள்
திருமருகல் ஒன்றிய கழகச் செயலாளர்

ஜெயலலிதா எம் பி
கொள்கை பரப்பு செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திமு கழகம்

சென்னை-14
20 8 1987

# மதுரைமாவட்டம்பால் உற்பத்தியாளருக்கு கூடுதல் விலை

மதுரை ஆக 20. மதுரை மாவட்ட பால்வள ஒன்றியத்தில் கொள்முதல் செய்யப்படும் பாலுக்கு கூடுதல் விலை தர நிர்வாகம் முடிவு செய்துள்ளதாக பால்வளத் தலைவர் சாகுல் அமீது தெரிவித்தார்.

மதுரை மாவட்ட கூட்டுறவு ஒன்றிய பால்வளத் தலைவராக பதவி ஏற்ற பின் சாகுல் அமீது நிருபர்களுக்கு பேட்டி அளித்தார் அப்போது அவர் கூறியதாவது

பால் வளத்திற்கு பால் கொள்முதல் செய்யப்படும் விலை எருமைப்பால் லிட்டர் ஒன்றுக்கு 15 பைசா உயர்த்தி தரப்படுகிறது பசும்பாலிற்கு 10 பைசா விலை உயர்த்தி தரப்படுகிறது இத்திட்டம் இம்மாதம் 21ம் தேதி முதல் அமுலுக்கு வருகிறது

இந்த விலை உயர்வால் 1 லட்சம் பால் உற்பத்தியாளர்கள் பயன்பெறுவார்கள்

பால் கொள்முதல் செய்வதை சீர் செய்யவும் சிறப்பாக செயல்படுத்தவும் பால் கொள்முதல் குழு ஒன்று அமைக்கப்படுகிறது இந்தக்குழு ஆண்டிப்பட்டி உசிலம்பட்டி பகுதிகளுக்குச் சென்று பால் உற்பத்தியாளர்களை சந்திக்கும் இந்தக் குழுவில் கால்நடை மருத்துவர்கள் இடம் பெறுவார்கள் கால்நடைகளை நன்கு பராமரித்து அதிக பால் உற்பத்தி செய்வதற்கான வழிவகைகளை இக்குழு செய்யும்

பேட்டியின் போது நிர்வாக இயக்குநர் ஆதிமூலம் உடனிருந்தார்

## முதல்வர் நீடூழிவாழ தொழிற்சங்கம் பிரார்த்தனை

மதுரை ஆக 19 மதுரை அண்ணா பஞ்சாலை தொழிலாளர் சங்கத்தின் நிர்வாகிகள் கூட்டம் 15ம் தேதி நடைபெற்றது.

கூட்டத்தில் பொதுச் செயலாளர் எஸ் பெருமாள் துணைத் தலைவர் வி பெருமாள் மற்றும் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண நலம் பெற்று தாயகம் திரும்ப வேண்டும் என்ற தீர்மானம் உட்பட பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன

# இலங்கை உடன்பாடு பின்னணி என்ன?

# எஸ். டி. எஸ். விளக்கம்

ராமநாதபுரம், ஆக 20. இந்திய இலங்கை உடன்பாட்டின் பின்னணி என்ன என்பதை முன்னாள் அமைச்சர் எஸ் டி எஸ் கூறினார்.

ராமநாதபுரத்தில் நடந்த கழக பொதுக்கூட்டத்தில் பேசுகையில் முன்னாள் அமைச்சர் எஸ் டி எஸ் கூறியதாவது:

திமுக தலைவர் இலங்கை ஒப்பந்தம் ஈழத்தமிழர்களுக்கு கேடு பயப்பன என்றும் இந்த ஒப்பந்தத்தைக் கண்டிப்பதாகவும் கூறினார்.

புரட்சித்தலைவர் செய்கின்ற காரியத்தை கருணாநிதி எதை ஆதரித்தார்? பத்து ஆண்டுகளாக ஆயிரக்கணக்கான நன்மைகளை புரட்சித்தலைவர் ஆட்சி மக்களுக்கு செய்துள்ளது.

ஏதாவது ஒன்றை இதுவரையிலும் கருணாநிதி ஆதரித்தாரா? இல்லையே! இதை மட்டும் எப்படி ஆதரிப்பார்? புரட்சித்தலைவர் என்ன செய்தாலும் அதை எதிர்ப்பது தான் கருணாநிதியுடைய வேலை நல்லது எது கெட்டது எது என்று பகுத்து பார்த்து எதிர்ப்பதல்ல புரட்சித்தலைவர் செய்தால் அதை எதிர்க்க வேண்டும் அதுதான் கருணாநிதியுடைய கொள்கை

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் தனி விமானத்தில் டில்லியிலிருந்து சென்னை வந்தார்கள் மாநில சுயாட்சி கேட்கின்ற கருணாநிதி ஒரு மாநில முதல் அமைச்சருக்கு தேவைப்படுகிற பொழுது தனி விமானம் கொடுத்து உதவிய மத்திய அரசை பாராட்டி இருக்க வேண்டும்

அப்படி பாராட்டி இருந்தால் அவர் கேட்கிற மாநில சுயாட்சிக்கு அர்த்தம் உண்டு பாராட்டாவிட்டாலும் பாதகமில்லை அதற்குள்ள இரகசியம் என்ன என்று கேள்வி குறியை எழுப்பினார் இதில் என்ன ரகசியம் இருக்கிறது தேவைப்பட்டது இந்திய அரசு பெருமையோடு விமானம் கொடுத்து உதவியது கருணாநிதி எம் ஜி ஆர் ஆட்சியை சின்னாபின்னமாக்குவேன் என்று பேசுகிறார் ஒரு ஆட்சி செய்கின்ற நன்மையை பாராட்டுவதும் தவறுகளை சுட்டிக் காட்டுவதுதான் எதிர்க்கட்சியுடைய வேலை சின்னாபின்னமாக்குவேன் என்று சொல்வது அதற்கேற்றவாறு நடவடிக்கைகளில் ஈடுபடுவது துரோகமனப்பான்மையாகும் இந்த ஒப்பந்தத்தை கருணாநிதி ஆதரிக்கிறாரா எதிர்க்கிறாரா என்பதை பற்றி நமக்கு கவலை இல்லை இந்த ஒப்பந்தத்தின் நன்மைகளைப் பற்றி நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொல்வது நமது கடமையாகும்

இலங்கை சுதந்திரம் பெற்ற நாள் முதல் கொண்டு தொடர்ந்து ஈழத்தமிழர்களுக்கும் இந்திய வம்சா வழி தமிழர்களுக்கும் பல இன்னல்களையும் கொடுமைகளையும் செய்து கொண்டே வந்துள்ளது. புதிய பல சட்டங்களை இலங்கை அரசு இயற்றியது சட்டங்களை கொண்டே தமிழ் இனத்தின் உரிமைகளை பறித்து வந்துள்ளது

தமிழ் இனத்தையே அழிக்க வேண்டும் என்று சிங்கள அரசும் அதிபர் ஜெயவர்த்தனேவும் முடிவு கட்டியிருந்தார்கள் பதினைந்திற்கு மேல் முப்பந்தைந்து வயதுக்குட்பட்ட தமிழ் இளைஞர்களைதேடி பிடித்தார்கள் அவர்களை கொண்டு வந்து சித்ரவதை செய்தார்கள்

அவர்களை கொக்கியில் மாட்டி தலை கீழாக தொங்க விட்டார்கள் அப்படி தொங்கவிட்டவர்களுக்கு கீழே நெருப்பை போட்டு எரித்தார்கள் இரும்பு கம்பிகளால் அவர்களை அடித்து நொறுக்கினார்கள் அவர்களின் விரல் நகங்களில் ஊசிகளை ஏற்றி சித்ரவதை செய்தார்கள்

திரையில் பரப்பட்ட கண்ணாடி துண்டுகள் மீது வெறும் காலுடன் நடக்க விட்டு கொடுமை படுத்தினார்கள் மூக்குத் துவாரத்தில் மிளகாய் பொடியை செலுத்தினார்கள் சிறுநீர் துவாரத்தில் சிறிய கம்பிகளை நுழைத்து கொடுமைபடுத்தினார்கள்

காதுகளை அறுத்தார்கள்

கைவிரல்களை துண்டித்தார்கள்.

ஊசியிட்டு காதுகளில் குத்தினார்கள்

தொண்டையில் மலைப்பாம்பின் வாலை விட்டு கொடுமைபடுத்தினார்கள்

இருபது பேர் இருக்கக் கூடிய அறையில் நூறு பேர்களை மூட்டைகளை போடுவதுபோல் ஒருவர் மேல் ஒருவரை அடுக்கினார்கள்

இந்தக் கொடுமையினால் காற்று இல்லாமல் தண்ணீர் இல்லாமல் சித்ரவதைக்கு ஆட்பட்டு இருந்தவர்கள் கணக்கில் அடங்காது

இளைஞர்களை ஆண்மை இழக்கச் செய்தார்கள் இதுபோன்ற கொடுமைகளை தடுத்து நிறுத்தத் தான் இந்த ஒப்பந்தம் ஏற்பட்டது

## இராணுவதீர்வா?

இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே ஈழப் பிரச்சினைக்கு ஒரே வழி இராணுவ தீர்வு என்றார் இந்திய பிரதமர் அரசியல் தீர்வு வேண்டுமென்று வலியுறுத்தி வந்தார்.

ஆனால் கிளிப்பிள்ளையை போல இராணுவ தீர்வு தான் ஒரே மார்க்கம் என்று இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே ஆரம்பித்தார் இராணுவ தீர்வு காண்பதற்காக நடவடிக்கைகளில் ஈடுபட்டார்.

இலங்கை அணிசேரா நாடுகளில் ஒரு உறுப்பினர் இந்தியாவும் அணி சேரா நாட்டின் உறுப்பினர் இருப்பினும் இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே அணி சேர்ந்த நாட்டின் உதவிகளை நாடினார் அமெரிக்கா, சீனா, பாகிஸ்தான், இங்கிலாந்து, ஆகிய நாடுகள் உதவிகளை நாடினார் இலங்கை அமைச்சர் அதுலத்முதலி இந்த நாடுகளுக்கு இராணுவ உதவி பெற சுற்றுப் பயணம் மேற்கொண்டார்

தென் ஆசிய நாடுகளின் ஒத்துழைப்பு அமைப்பில் இந்தியாவும் இலங்கையும் அங்கம் வகிக்கின்றன இருந்தும் இந்தியாவை அலட்சியப்படுத்தி விட்டு இராணுவ தீர்வுகாண்பதற்கு இலங்கை அரசு பல முயற்சிகளில் ஈடுபட்டது இராணுவ செலவை நூறு மடங்காக ஆக்கியது நவீனமான புதுபுது இராணுவ ஆயுதங்களை அமெரிக்கா சீனா பாகிஸ்தான்போன்ற நாடுகளிலிருந்து வாங்கிக் குவித்தன

## கூலிபடைகள்

இங்கிலாந்து, இஸ்ரேல் பாகிஸ்தான் தென் ஆப்பிரிக்கா போன்ற நாடுகளிலிருந்து கூலிப்படைகளை இலங்கை அரசு அழைத்தது அவர்களை கொண்டு சிங்கள இராணுவத்திற்கு பயிற்சிகள் அளிக்கப்பட்டன. தமிழர்களை தாக்குவதற்கு கூலிப்படைகளை பயன்படுத்தினார்கள்,

அமெரிக்கா, சீனா பிரிட்டன், பாகிஸ்தான் போன்ற நாடுகளில் இருந்து வாங்கப்பட்ட போர் கருவிகளை கொண்டும் ஏவுகணைகள் கொண்டும் இஸ்ரேல், பிரிட்டன், தென் ஆப்ரிக்கா பாகிஸ்தான் போன்ற நாடுகளிலிருந்து வந்துள்ள கூலிப்படைகளை கொண்டும் நாள் தோறும் இரவு என்றும் பகல் என்றும் பாராமல் விமானங்கள் மூலமும் தரைப்படை மூலமாகவும் கடல் மூலமாகவும் தமிழர் பகுதியை கடுமையாக சிங்கள இராணுவம் தாக்கத் தொடங்கின

இவ்வாண்டு ஜூன் மாதம் 2 ஆம் நாள் மட்டும் மூன்றுமணி நேரத்தில் 562 குண்டுகளை தமிழர் பகுதியில் வீசினார்கள் மிகக் கடுமைவாய்ந்த எர் குண்டுகளையும் போட்டார்கள்

சிவன் கோவில் மீது மசூதிகள் மீது, மாதா கோவில்மீது மாரியம்மன் கோவில் மீது மருத்துவமனைகள் மீது கல்வி நிலையங்கள் மீது கண்மூடித்தனமாக குண்டுகளை போட்டும் தாக்குதலை நடத்தினார்கள் நாள்தோறும் நூற்றுக்கணக்கான தமிழர்கள் உயிரிழந்தார்கள் நாள்தோறும் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட தமிழர்கள் காடுகளுக்கு ஓடினார்கள்

தமிழர்களை கூண்டோடு அழித்துவிட வேண்டும் தமிழர் பகுதியை தரைமட்டமாக்க வேண்டும் அதற்கேற்றதிட்டங்கள் தீட்டப்பட்டன, ஆயிரம் அடி உயரத்திலிருந்துகொண்டு மணிக்கு 200 குண்டுகளை தொடர்ந்து போடவேண்டும் ஏவுகணைகளை வீச வேண்டும் இதுதான் சிங்கள அரசின் கடைசிமுழு மூச்சான திட்டம்

ஈழத்தமிழர்கள் கோரிக்கைகள் நிறைவேற வேண்டும் அவர்களுடைய தன்மானத்தையும் காப்பாற்றிகொள்ள வேண்டும் இந்த சூழ்நிலையில் இலங்கை இந்தியா ஒப்பந்தம் நல்லசிறந்த ஒப்பந்தமாகும்

ஈழத்தமிழர்கள் வாழுகின்ற பகுதிகள் தொன்றுதொட்டு அவர்களுடைய தாயகமாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது

இன்றைக்கு இலங்கையின் அரசியல் சட்டப்படி ஒரு மொழி நாடாக இலங்கை நாடு ஏற்றுக்கொள்ளப்படுகிறது அதாவது சிங்கள மொழி நாடு இந்த ஒப்பந்தப்படி இருமொழி பேசும் நாடாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. தமிழும், சிங்களமும் பேசுகிற மக்கள் கொண்ட நாடாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது

இலங்கை சுதந்திரம் அடைந்த பிறகு சிங்கள அரசினால் தமிழ் ஆட்சி மொழி தகுதியிலிருந்து நீக்கப்பட்டது அதன் பிறகு தமிழ் தேசியமொழி அந்தஸ்திலிருந்தும் நீக்கப்பட்டது இன்றைக்கு இந்த ஒப்பந்தத்தின்படி தமிழ் தேசிய மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது

தமிழ் ஆட்சி மொழி அந்தஸ்து இல்லாததனால் இராணுவத்தில் காவல் துறையில் அரசு அலுவலகங்களில் தமிழர்களுக்கு உரிய இடம் கிடைக்கவில்லை தமிழர்கள் குறிப்பாக இராணுவத்திலும் காவல் துறையிலும் இல்லை என்றே சொல்லலாம். இந்தியாவில் I A,S. என்பது போல ஸ்ரீலங்காவில் C. A, S. என்ற பதவி உண்டு இன்றைக்கு ஒருவர் கூட இந்தப் பதவியில் இல்லை எதிர்காலத்தில் இந்த குறைபாடு நீக்கப்படும்

(தொடர்ச்சி பின்னால் வரும்)

# தமிழ்நாடு அரசு பரிசுச்சீட்டு

## சுதந்திரதின சிறப்புக் குலுக்கல்

தூத்துக்குடி ஏ என் கே ரத்தினசாமி நாடார் திருமண மண்டபத்தில் 1987 ஆகஸ்ட் 19ம் தேதி நடைபெற்ற 298-வது சுதந்திரதின 'சூப்பர் பம்பர்' பரிசுச்சீட்டு குலுக்கல் முடிவுகள்

முதற்பரிசு ரூ. 25,00,000
(எல்லா வரிசைகளுக்கும் பொது)
ஏ ஜி எக்ஸ் 636731

ஆறுதல் பரிசுகள் ரூ 5000
(மூன்று பரிசு பெற்ற வரிசை நீங்கலாக)
ஏஜிடபுள்யூ 636731 ஏஜிஒய் 636731
ஏஜிஇசட் 636731

இரண்டாவது பரிசு ரூ 5,00,000
(எல்லா வரிசைகளுக்கும் பொது)
ஏஜிடபுள்யூ 193939

ஆறுதல் பரிசுகள் ரூ 1,500 மூன்று
இரண்டாவது பரிசு பெற்ற வரிசை நீங்கலாக
ஏஜிஎக்ஸ் 193939 ஏஜிஒய் 163939 ஏஜிஇசட் 193939

மூன்றாவது பரிசு ரூ 1,00,000
ஏஜிடபுள்யூ 466465 ஏஜிஎக்ஸ் 428901
ஏஜிஒய் 961893 ஏஜிஇசட் 740280

நான்காவது பரிசு ரூ 5,000

| | | | | |
|---|---|---|---|---|
| ஏஜிடபிள்யு | 135076 | 810413 | 994315 | 019540 |
| ஏஜிஎக்ஸ் | 686618 | 147[illegible]91 | 862256 | 829[illegible]87 |
| ஏஜிஒய் | 0742[illegible] | 767255 | 204154 | 878414 |
| ஏஜிஇசட் | 810438 | 183090 | 329185 | 254881 |

எல்லா வரிசைகளுக்கும் பொது
100 ஐந்தாவது பரிசுகள் தலா ரூ. 1,000

| | | | | |
|---|---|---|---|---|
| 703477 | 209[illegible]3 | 122214 | 409317 | [illegible]17272 |
| 834825 | 819623 | 689583 | 110029 | 879004 |
| 910372 | 109633 | 338800 | 751422 | 164450 |
| 610498 | 4281[illegible]8 | 302[illegible]9 | 468278 | 484880 |
| 788983 | 930784 | 110391 | 479213 | 764923 |

400 ஆறாவது பரிசுகள் தலா ரூ 500 வீதம்
கீழ்க்காணும் ஐந்து எண்களில் முடிவடையும் எல்லா பரிசுச் சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 04183 | [illegible]6797 | [illegible]5861 | 636[illegible]6 | 83154 |
| 17366 | 34312 | 52033 | 76226 | 94273 |

ஏழாவது பரிசுகள் 4,000 தலா ரூ 5[illegible] வீதம்
கீழ்காணும் நான்கு எண்களில் முடிவடையும் எல்லா பரிசு சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 0523 | 2917 | 4[illegible]57 | 6460 | 8251 |
| 1176 | 3078 | 5500 | 7841 | 9355 |

ஏழாவது பரிசு பெற்ற பரிசு சீட்டுகளின் அடிக்கட்டைகளுக்கு விற்பனையாளர் பரிசு ரூ 20 உண்டு

எட்டாவது பரிசுகள் 4,000 தலா ரூ 20 வீதம்
கீழ்காணும் நான்கு எண்களில் முடிவடையும் எல்லா பரிசு சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 0611 | 2307 | 4386 | 6055 | 8512 |
| 1371 | 3275 | 5408 | 7169 | 9370 |

மேற்கண்ட எண்களின் அடிக்கட்டைகள் வைத்திருக்கும் விற்பனையாளர்களுக்கு ரூ 10 பரிசு உண்டு

ஒன்பதாவது பரிசுகள் 40,000 தலா ரூ 10 வீதம்
கீழ்க்காணும் மூன்று எண்களில் முடிவடையும் எல்லா பரிசு சீட்டுகளுக்கும்

0[illegible]3 204 494 658 894 158 302 575 796 914

மேற்கண்ட எண்களின் அடிக்கட்டைகளை வைத்திருக்கும் விற்பனையாளர்களுக்கு ரூ 5 பரிசு உண்டு

பத்தாவது பரிசுகள் 120000 தலா ரூ 5 வீதம்
கீழ்க்காணும் மூன்று எண்களில் முடிவடையும் எல்லா பரிசுசீட்டுகளுக்கும்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 006 | 282 | 412 | 606 | 823 | 015 | 255 | 421 | 682 | 896 |
| 057 | 934 | 484 | 609 | 828 | 180 | 292 | 541 | 745 | 951 |
| 117 | 394 | 589 | 723 | 905 | 173 | 316 | 597 | 739 | 901 |

மேற்கண்ட பரிசுச்சீட்டுகளின் அடிக்கட்டைகளை வைத்திருக்கும் விற்பனையாளர்களுக்கு ரூ. [illegible] பரிசு உண்டு

பரிசுகளை கோரிப் பெறுவதற்கான இறுதிநாள்: 17 10 87

இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச்சீட்டு, சென்னை-1

DIPR: 2040 MS 87-ET

## அட்டைதாரர்கட்கு கூடுதல் பாமாயில்

கோவை. ஆக. 20— சென்னை நகரம்மற்றும் புறநகர்ப்பகுதிகளில்உள்ள எல்லா குடும்ப அட்டைதாரர்களுக்கும் ஆகஸ்ட் மாதம் 2 கிலோ உதிரி பாமாலின் எண்ணெய் வழங்கப்படும் ஜூலை '87 மாதம் 1 கிலோ உதிரி பாமாலின் எண்ணெய் பெறாதவர்கள் ஆகஸ்ட் மாதம் சேர்த்து பெற்றுக் கொள்ளலாம் டின் மற்றும் பைகளில் வழங்கப்படும் சமையல் எண்ணெய்க்கும் கூடுதலாக மேற்கண்ட உதிரி சமையல் எண்ணெய் வழங்கப்படுகின்றது

## புதுவையில்சுதந்திர போராட்ட படம்

புதுவை ஆக 20— பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து சுதந்திர வேள்வியில் அண்ணல் மகாத்மா காந்தி நேரு போன்றோர் ஈடுபட்டதை சித்தரிக்கும் சினிமா படம் ஒன்று சென்னை திரைபட டிவிஷன் மூலம்இங்குள்ளதிரை அரங்கில் வெளியிடப்பட்டது இச்சினிமா படத்தை மாநில முதலமைச்சர் பாரூக் துவக்கு வைத்து ம் மாநிலத்தில் வறுமையை அறவே நீக்கவேண்டுமென அரசு தீவிரமாக செயலாற்றி வருகிறது என்றார் இவ்விழாவிற்கு சட்டமன்ற எதிர் கட்சித் தலைவரும் கழக மாநில செயலருமான பி கே லோகநாதன் தலைமை வகித்தார் முன்னதாக திரை அரங்கு உரிமையாளர் லக்கி பெருமாள் வரவேற்றார் திரைப்படடிவிஷன் அதிகாரி ராவ் நன்றி கூறினார்

# தி. மு. க. சேர்மன் கொலை வெறிப்பேச்சு

## அதிகாரிகள் கோதிப்பு

மணப்பாறை. ஆக 20 நகராட்சி கமிஷனரை கொலை செய்து விட்டு ஜெயிலுக்குப் போகவும் தயங்கமாட்டேன் என்று மணப்பாறை நகராட்சி தி. மு. க. தலைவர் மிரட்டியுள்ளார்

திருச்சி மாவட்டம் மணப்பாறையில் நகராட்சி பள்ளியில் வேலை பார்க்கும் ஆசிரியர்களுக்கு 6 மாதமாக சம்பளம் தரப்படவில்லை,

சம்பளம் கிடைக்காததால் பள்ளியை ஆசிரியர்கள் மூடிவிட்டனர்.

செய்தி அறிந்த திருச்சி மாவட்ட ஆட்சித்தலைவர் புஜாகர்சிங் அந்த ஆசிரியர்களுக்கு உடனே சம்பளத்தை கொடுக்குமாறு நகராட்சி ஆணையாளருக்குஉத்தரவிட்டார்.

நகராட்சி ஆணையாளர் ஆசிரியர்களுக்கு சம்பளம் தந்தார்

தி.மு.கவைச் சேர்ந்த நகராட்சித் தலைவரான கணேசனுக்கு இது பிடிக்கவில்லை என்னை கேட்காமல் எப்படி சம்பளம் கொடுக்கலாம் என்று ஆணையாளர் தேவதாசை திட்டினார் ஒரு விழாவில் கணேசன் பேசியதாவது:-

இந்தச் செயல் மூலம் கமிஷனர் தேவதாஸ் ஈரத் துணி போட்டுஎனது கழுத்தை அறுத்து விட்டார்.

எனக்கு இந்த கேவலத்தை உண்டாக்கிய ஆணையாளரை கொலைசெய்யவும் தயங்கமாட்டேன்.

சம்பளம் வாங்கிய ஆசிரியர்கள் சேமநல நிதிக்கடனை எப்படிபெறுகிறார் என்னை மீறி அவர்கள் கடன் வாங்கி விட்டால் என் உள்ளங்கையில் சோறு ஆக்கி உங்களுக்கெல்லாம் தருகிறேன்.

இவ்வாறு கணேசன்பேசினார்.

திமுக சேர் மனின் பேச்சு அதிகாரிகளிடையே கொதிப்பை ஏற்படுத்தியுள்ளது

நகர எம் ஜி ஆர் மன்றத்தினர் நகர காங்கிரஸ் கமிட்டியினர் கணேசனின் செயலை கண்டித்தனர்.

### வருத்தம் தேரிவிக்கவேண்டும்

நகராட்சி தலைவர் கணேசன் இம்மாதம் 30 ம் தேதிக்குள் வருத்தம் தெரிவிக்க வேண்டும் இல்லை எனில் போராட்டம் நடத்துவோம் என்று எம் ஜி ஆர் மன்றத்தினர் எச்சரித்துள்ளனர்.

காங்கிரசார் வெளியிட்ட அறிக்கையில் நகராட்சித்தலைவர் அரசு ஊழியரை தரக்குறைவாக பேசுவது கண்டிக்கத்தக்கது

அரசு இதில் தலையிட்டு கணேசன் மீது நடவடிக்கைஎடுக்கவேண்டும் மேலும் கழக பொதுக்குழு உறுப்பினர் தங்கவேல மற்றும் சர்வகட்சியினரும் இதைக் கண்டித்து அறிக்கை வெளியிட்டுள்ளனர்

# நகராட்சியில் தி.மு.க. கோஷ்டி சண்டை பணிகள் முடக்கம்

திருவள்ளூர் ஆக 20- திருவள்ளூர் நகராட்சியில் திமுகவினரிடையே கோஷ்டி சண்டை ஏற்பட்டுள்ளது. இதனால் நகராட்சி பணிகள் முடங்கியுள்ளன

திருவள்ளூர் நகராட்சி தலைவர் சுந்தரராஜன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சேர்ந்தவர்.

திமுக உறுப்பினர்கள் 13 பேர் உள்ளனர் திமுக உறுப்பினர்களுக்கும் நகரசபைத் தலைவருக்கும் இடையே கடும் மோதல் இருந்து வருகிறது

இதற்கிடையில் நகரசபை கூட்டம் நடந்த போது சில திமுக உறுப்பினர்கள் நகராட்சி ஆணையாளர் மீது குற்றம் சுமத்தி பேசினர் திமுக கவுன்சிலர்களில் மற்றொரு கோஷ்டி ஆணையாளரை பாராட்டியது குடிநீர் தட்டுப்பாட்டை சிறப்பாக சமாளித்தார் ஆணையாளர் என்று அந்த திமுகவினர் கூறினார் இதில் கோஷ்டி சண்டை ஏற்பட்டது

பின்னர் அனைவரும் வெளிநடப்பு செய்தனர் வெளி நடப்பு செய்வதற்கான காரணத்தை திமுகவினரால் விளக்க முடியவில்லை

நகர மன்றத் தலைவர் தங்களுடன் ஒத்துழைக்கவில்லை என்று அவர்கள் கூறினர்

குடிநீர் தொட்டி அருகே சைக்கிள்ஸ்டாண்ட் வைக்க வேண்டும் என்று ஒரு தி. மு. க. உறுப்பினர் தீர்மானம் கொண்டு வந்தார். இதை மற்றொரு தி மு க. உறுப்பினர் விசுவகேது எதிர்த்தார். தீர்மானம் தோற்றது.

மற்றொரு கூட்டத்தில் அந்த தீர்மானம் நிறைவேற்றப்பட்ட போதிலும் அதை நிறைவேற்றுவது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது

இந்த கோஷ்டி சண்டையால் நகரமன்ற பணிகள் முடங்கிக் கிடக்கின்றன.

# மதுவிலக்கு போலீஸ்: கூடுதலாக 1300பேரை நியமிக்க அரசு முடிவு

கோவை. ஆக 20- மதுவிலக்கு போலீஸ் துறைக்கு கூடுதலாக 1300 போலீசாரை நியமிக்க முடிவு செய்யப்பட்டுள்ளதாக உள்துறை செயலாளர் டி. வி. வெங்கட்ராமன் கூறினார்.

கோவையில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் டி. வி. வெங்கட்ராமன் கூறியதாவது:

தமிழ்நாட்டில் மதுவிலக்கு அமல் பிரிவை மேலும்வலுப்படுத்ததிட்டமிடப்பட்டுள்ளது

இதற்காக 1300 போலீசார் கூடுதலாக நியமிக்கப்படுவார்கள் மது விலக்கு அமல் பிரிவுக்கு மேலும் 250வாகனங்கள் வாங்கவும் திட்டமிடப்பட்டுள்ளது இதற்கு சுமார் 5 கோடி ரூபாய் செலவாகும் என மதிப்பிடப்பட்டுள்ளது

மதுவிலக்கு வழக்குகள் அதிகமாக உள்ளதால் விசேஷ கோர்ட்டுகளோடு மற்ற மாஜிஸ்திரேட் கோர்ட்டுகளும் இந்த வழக்குகளை விசாரிக்கலாம் என அரசு உத்தரவிட்டுள்ளது

கள்ள சாராயக் கடத்தலைத்தடுக்க மாநில எல்லைகளில் கண்காணிப்புதீவிரப்படுத்தப்பட்டுள்ளது.

இவ்வாறு டி. வி. வெங்கட் ராமன் கூறினார்

## தஞ்சை சரஸ்வதி மகாலுக்கு ரூபாய் 2½கோடி ஒதுக்கீடு

தஞ்சை ஆக, 20- தஞ்சாவூரில் உள்ள சரஸ்வதிமகால் நூல்நிலையத்திற்கு 7-வது திட்டகாலத்தில் 2 கோடியே50லட்ச ரூபாயை மத்திய அரசு ஒதுக்கீடு செய்துள்ளது

இத்தகவலை நூல் நிலைய டைரக்டர் டாக்டர் சுவாமிநாதன் தெரிவித்துள்ளார்

## பால்வளத் தலைவர் பதவி ஏற்பு

மதுரை. ஆக. 21 மதுரை மாவட்ட பால்வள ஒன்றியத் தலைவர் சாகுல் அமீது இன்று காலை 11 மணியளவில் பதவி ஏற்றார்

பதவி ஏற்பு விழாவில் மாவட்டச்செயலாளர் முத்தையா மற்றும் பொ. அன்பழகன் கோ நவநீதகிருஷ்ணன் சிவகுமார் எம் எல் ஏ செல்வேந்திரன் எம் மாரிமுத்து எம் எல் ஏ மற்றும் தங்கம் ஆகியோர் பங்கேற்றனர் நிர்வாக இயக்குநர் ஆதிமூலம் அனைவரையும் வரவேற்றார்

## ரூபாய் 30 லட்சம் போதைப் பொருள் கடத்தல்:இருவர் கைது

சென்னை, ஆக 20 ரூபாய் 30 லட்சம் மதிப்புள்ள போதை பொருளை கடத்தியதாக சுதா என்ற செந்தில் மற்றும் பிரேம் ஆனந்த என்ற இருவரை போதைப் பொருள் கடுப்பு இன்ஸ்பெக்டர் லட்சுமிநாதன் கைது செய்தார்.

இவர்கள் இருவரும் ஹிராயின் என்றபோதைப் பொருளை கீழ்ப்பாக்கம் மருத்துவமனையில பணி புரியும் பெண் மருத்துவர்களுக்கு விற்பதற்காக வைத்திருந்தபோது கைது செய்யப்பட்டனர்

பாண்டிபஜாரில் ரூபாய் 10 ஆயிரம் மதிப்புள்ள அபின் வைத்திருந்ததாக சுல்தான் என்பவரையும் லட்சுமிநாதன் கைதுசெய்தார்

கைது செய்யப்பட்ட சுதா என்ற செந்தில். ஏற்கனவே போதை மருந்து கடத்திய குற்றத்திற்காக சுவிட்சர்லாந்து நாட்டில் 12 மாதம் சிறைதண்டனை பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது

# ஈழத்தமிழர்களுக்கு உரிமை பெற்றுத்தந்த புரட்சித்தலைவ அமைச்சர்பொன்னையன் பேச்சு

காஞ்சிபுரம் ஆக 20— சமரச ஒப்பந்தத்தின் மூலம் இலங்கை தமிழர்களுக்கு உரிமை பெற்றுத் தந்தவர் முதல்வர்புரட்சித் தலைவர் என்று அமைச்சர் பொன்னையன் கூறினார்.

இந்திய-இலங்கை சமரச ஒப்பந்தத்தை வரவேற்று காஞ்சிபுரத்தில் கழக பொதுக்கூட்டம் அன்பழகன் தலைமையில் நடைபெற்றது இக்கூட்டத்தில் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

முதல்வர் புரட்சித் தலைவர் தமிழகத்தில் தமிழ் ஆட்சி நடத்தி வருகிறார். தமிழகத்தில் தமிழ்ப் பல்கலைக்கழகம் ஒன்றுநிறுவிட பேரறிஞர் அண்ணா விரும்பினார் ஆனால் அவருக்கு பிறகு முதலமைச்சராக வந்த கருணாநிதியோ. மேல் நடவடிக்கை தேவையில்லை என்று கிடப்பில் போட்டுவிட்டார்

### சத்துணவு

அண்ணா வழியில் செல்லும் முதல்வர் புரட்சித் தலைவரோ அண்ணா விருப்பத்தை நிறைவேற்றினார் தமிழ்ப் பல்கலைக்கழகம் கண்டார் தமிழ்த் தாய்க்கு பல அணியாரங்களைப் பூட்டி முதல்வர் ஆக்கப் பணிகள் செய்து வருகிறார்

பசியின் கொடுமையை உணர்ந்தநமது முதல்வர் அந்த கொடுமையை பிஞ்சு உள்ளங்கள் அனுபவிக்கக் கூடாது என்று சத்துணவு திட்டத்தை சிறப்புற அமல் நடத்தி வருகிறார்.

இலங்கையில் கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டுவரும் இலங்கை தமிழர்கள் உரிமை பெற விரும்பினர் முதல்வர் புரட்சிதலைவர் மாறுபட்ட கருத்துக்களை கொண்டிருந்த பல்வேறு அமைப்புகளை வரவழைத்து பேசினார் அவர்களின் பாதுகாப்புக்காக ரூபாய் 7 கோடி கொடுத்தார்.

மக்களிடம் இருந்து திரட்டி ரூபாய் 4 கோடி வழங்கினார்,

### உரிமை

ஈழத்தமிழர்கள் உரிமை பெற்றவர்களாக வாழ்ந்திட ஈழத்தமிழர் ஒப்பந்தம் கண்டவர் அவர்களின் அமைதியான வாழ்க்கைக்கு வழிவகுத்தவர் முதல்வர் புரட்சித் தலைவர்

இலங்கைத் தமிழர்களுக்காக நீலிக்கண்ணீர் வடிக்கிறார் கருணாநிதி

அன்று கருணாநிதி பரிந்துரை செய்ததின் மூலம்தான் ஈழ விடுதலைக்கு பயிற்சி கட்டி மணியை மைய அரசுநாடு கடத்தி இருக்கிறது இதை கருணாநிதி உணர்ந்து பார்க்க வேண்டும்

இவ்வாறு அமைச்சர் பொன்னையன்கூறினார்

## மது விலக்கு காவல் நிலையம் திறப்பு

சென்னை ஆக, 20- சென்னை மகாபலிபுரம் சாலையில் உள்ள ஈஞ்சம்பாக்கத்தில்புதிய மதுவிலக்கு காவல் நிலையத்தை மதுவிலக்கு போலீஸ் சூப்பிரண்ட் சுந்தரவரதன் திறந்து வைத்தார் இவ்விழாவில் மதுவிலக்கு கூடுதல் போலீஸ் சூப்பிரண்ட் ராமமூர்த்தி இன்ஸ்பெக்டர் கலியமூர்த்தி ஆகியோர் கலந்துகொண்டு பேசினர்.





## சமூகநலத் துறை

அரசாணை (நிலை)எண் 1381
நாள் 12-8-87

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6-ஆம் பிரிவின் கீழான விளம்பல்

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவரஅட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்படவேண்டிய இழப்பீட்டுதொகைமுழுவதும் பொதுவருவாய்களிலிருந்து செலுத்தப்படவேண்டுமென்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894ம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் [மையச்சட்டம் 1 1894] 6ஆம் பிரிவின்படி தமிழ் நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 0.20.5 எக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக, அதாவது ஆதிதிராவிடர்களுக்கு மயானப்பாதை வசதிக்கு தேவைப்படுகின்றனஎன்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந் நிலங்கள் வரைபடங்கள் விழுப்புரம் ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன அவற்றை அலுவலகப் பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம்:தென்னாற்காடு வட்டம்:விழுப்புரம்
கிராமம்: நெ: 138 கொங்காம் பூண்டி

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| புன்செய் 21-12ஏ | நாராயணசாமி நாயுடு மற்றும் பலர் | 0 06.0 எக் | |
| புன்செய் 23-1ஏ | அப்பாவுமற்றும் பலர் | 0.03.0 எக் | |
| புன்செய் 23 2ஏ | அப்பாவுமற்றும் பலர் | 0.01.0 எக் | |
| புன்செய் 26 3ஏ | நாராயணசாமி | 0 03.0 எக் | |
| புன்செய் 26 4ஏ | அச்சுத நாயுடு | 0.01 0 எக் | |
| புன்செய் 26 4டி | ,, | 0.01.5 எக் | |
| புன்செய் 26 5 | துர்கையன் | 0.01 5 எக் | |
| புன்செய் 26 6 | திருமதி கஸ்தூரி | 0.01.0 எக் | |
| புன்செய் 26 7எ | என். வெங்கடேசன் | 0,01 0 எக் | |
| புன்செய் 26 8ஏ | நாராயணசாமி நாயுடுமற்றும்பலர் | 0.01.0 எக் | |
| புன்செய் 26 9ஏ | ஆர். அபில நாயுடு | 0 00 5 எக் | |
| | மொத்தம் | 0 20 5 எக் | |

சோ குமாரசுவாமி
அரசு துணைச்செயலாளர்

டிஐபிஆர் 331 எஸ் ஏ 37 எலிகண்ட்

## சமூக நலத்துறை

அரசாணை [நிலை] எண் 1417
நாள் 13 8 87

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6 ம் பிரிவின் கீழான விளம்பல்

### அறிக்கை

கீழ்க்காணும் விபர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலத்தை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மன நிறைவடைந்திருப்பதோடு அந்நிலத்திற்கு வழங்கப்படவேண்டிய இழப்பீட்டுத்தொகை முழுவதும் பொது வாருவாய்களிலிருந்து செலுத்தப்படவேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே 1894-ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச்சட்டம் 1 1894) 6-ம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதும் 0 54 0 எக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலம் ஒரு பொதுநோக்கத்திற்காக அதாவது வடக்கு இளையாங்குடி குரூப் கொங்கம்பட்டி கிராம ஆதிதிராவிடர்கள் வீட்டு மனைக்கு தேவைப்படுகின்றன என்று இதன்மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலத்தின் வரைபடம் சிவகங்கை ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம் பசும்பொன் முத்துராமலிங்கம்
வட்டம்:இளையாங்குடி
கிராமம்:கொங்கம்பட்டி (இளையாங்குடிவடக்குகுரூப்)

| | | | |
|---|---|---|---|
| புல எண் வகை 126-2ஏ புஞ்சை | வெள்ளைய கோன் மனைவி பாப்பம்மாள் (லேட்) அனுபவம் அவரது மகள் கருப்பாயி அம்மாள் | 0.54.0 | தரிசாக உள்ளது மரங்கள்கட்டடங்கள் கிணறுகள் ஏதுமில்லை |

சோ குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்
சமூக நலத்துறை

டி ஐ பி ஆர். எண்:97-பி எம்,கஸரா.

## சமூக நலத் துறை

அரசாணை [நிலை]. எண் 1383
நாள் 12 8 87

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6ம் பிரிவின் கீழான விளம்பல்

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காகக் கையகப்படுத்தவேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு, அந்நிலங்களுக்குவழங்கப்படவேண்டிய இழப்பீட்டுத் தொகைமுழுவதும் பொதுவருவாய் களிலிருந்துசெலுத்தப்பட வேண்டும் என்றும் இவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுளளது. ஆகவே 1894ம ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1- 1894) 6ஆம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 1-39 5 எக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது தென்னாற்காடுமாவட்டம் பண்ருட்டி வட்டம் 104 சிலப்பி நாதன் பேட்டை பகுதி ரச்கோட்டை கிராம ஆதிதிராவிடர்களுக்கு வீட்டுமனை வசதிக்காக தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்

இந்நிலங்கள் வரைபடங்கள் ஆதிதிராவிடர் நலத் தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன அவற்றை அலுவலகப் பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம்: தென்னாற்காடு வட்டம்:பண்ருட்டி
கிராமம்: 104 சிலப்பி நாதன்பேட்டை

| | | | |
|---|---|---|---|
| புன்செய் 99-1 | ராமலிங்கம் மற்றும் பலர் | 0 23 0 எக் | |
| புன்செய் 99-2 | ஆறுமுகம் மற்றும் பலர் | 0.04 0 எக் | |
| புன்செய் 99 3 | கண்ணுசாமி ராஜேந்திரன் மற்றும்பலர் | 0.07 0 எக் | |
| புன்செய் 99 4 | ராஜீ மற்றும் பலர் | 0,08,0 எக் | |
| புன்செய் 99 5பி | ராமலிங்கம் மற்றும் பலர் | 0,11.5 எக் | |
| புன்செய் 99 11 | கோமேதகம்மற்றும் பலா | 0,86,0 எக் | |
| | மொத்தம் | 1,39,5 எக் | |

சோ குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்

டி ஐ பி. ஆர் 331 எஸ், ஏ 67 எலிகண்ட்

## செங்கல்பட்டு மாவட்டம்

பரப்பளவு 7920 ச கி மீ மக்கள்தொகை 36 16 508
வளர்ச்சிகோட்டங்கள் : 4 ஊராட்சிஒன்றியங்கள் : 37

**காஞ்சிபுரம்**

| | |
|---|---|
| 1 வாலாஜாபாத் | 2 உத்திரமேரூர் |
| 3 குன்றத்தூர் (இ) படப்பை | 4 திருப்பெரும்புதூர் |
| 5 பூவிருந்தவல்லி | |

**செங்கல்பட்டு**

| | |
|---|---|
| 1 காட்டாங்கொளத்தூர் | 2 திருக்கழுக்குன்றம் |
| 3 திருப்போரூர் | 4 மதுராந்தகம் |
| 5 அச்சிறுபாக்கம் | 6 சித்தாமூர் |
| 7 லத்தூர் (இ) பவுஞ்சூர் | |

**சைதாப்பேட்டை**

| | |
|---|---|
| 1 பரங்கிமலை (இ) சிட்லபாக்கம் | 2 வில்லிவாக்கம் (இ) அம்பத்தூர் |
| புழல் | 4 மீஞ்சூர் |
| 5 சோழவரம் | 6 கும்மிடிப்பூண்டி |

**திருவள்ளூர்**

| | |
|---|---|
| 1 திருவள்ளூர் (இ) ஈக்காடு | 2 கடம்பத்தூர் |
| 3 பூண்டி | 4 திருத்தணி |
| 5 திருவேலங்காடு | 6 எல்லாபுரம் |
| 7 பள்ளிப்பட்டு | 8 ஆர் கே பேட்டை |

## செங்கல்பட்டு மாவட்டம்

பரப்பளவு 7920 ச கி மீ மக்கள் தொகை: 36,16 508
வருவாய்கோட்டங்கள் : 4 நகராட்சிகள் : 8
வட்டாட்சியர் அலுவலகங்கள் : 13 நகரியங்கள் 4

**காஞ்சிபுரம்**

1 காஞ்சிபுரம் 2 உத்திரமேரூர் 3 திருப்பெரும்புதூர்

**செங்கல்பட்டு**

1 செங்கல்பட்டு 2 மதுராந்தகம் 3 செய்யூர்

**சைதாப்பேட்டை**

1 சைதாப்பேட்டை 2 பொன்னேரி 3 கும்மிடிபூண்டி

**திருவள்ளூர்**

| | |
|---|---|
| 1 திருவள்ளூர் | 2 திருத்தணி |
| 3 ஊத்துக்கோட்டை | 4 பள்ளிப்பட்டு |

**நகராட்சிகள்**

| | | |
|---|---|---|
| காஞ்சிபுரம் | ஆலந்தூர் | பல்லாவரம் |
| தாம்பரம் | திருவொற்றியூர் | செங்கற்பட்டு |
| | திருவள்ளூர் | மதுராந்தகம் |

**நகரியங்கள்**

அம்பத்தூர் ஆவடி கத்திவாக்கம் மாதவரம்

# பொன்மனச்செம்மலின் ஆட்சியில் புதுப்பொலிவு பெற்ற பொன்னேரி

**கே பி கே சேகர் எம் எல் ஏ**

முதல்வர் புரட்சித் தலைவர் பொறுப்பேற்ற பத்தாண்டுகளில் தமிழகத்தில் வியத்தகு முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. கல்வித்துறை தொழில் துறை விவசாயத்துறை போன்ற எந்த துறையை எடுத்துக் கொண்டாலும் அதில் புரட்சித்தலைவர் அரசின் முத்திரையை காணலாம். இந்த வகையில் பொன்னேரித்தொகுதியும் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்துள்ளது.

சென்னையில் உள்ள மக்களுக்கு இரண்டு நிமிடத்திற்கு ஒரு பேருந்து குறிப்பிட்ட இடங்களுக்கு செல்வதற்காக கிடைக்கிறது. ஆனால் கிராமங்களில் உள்ள மக்களுக்கு அந்த வசதிகள் மிகக் குறைவு. பல மைல் தூரம் கால் கடுக்க நடந்து வந்து பஸ் ஏற வேண்டிய சூழ்நிலை இருந்தது. ஆனால் புரட்சித்தலைவர் ஆட்சிக்கட்டிலில் ஏறிய பிறகு இந்த நிலை முற்றிலுமாக மாறியுள்ளது. தாங்கள் வசிக்கும் இடங்களுக்கு அருகாமையிலேயே பேருந்து கிடைக்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

புரட்சித்தலைவரின் தாயுள்ளம் பொன்னேரி தொகுதிக்கு அளித்துள்ள பல்வேறு மக்கள் திட்டங்களால் பூவோடு சேர்ந்த நார் மணப்பதுபோல நானும் மணக்கிறேன். என்னுள்ளம் அந்தலைவரை வாழ்த்துகிறது மக்களுடன் சேர்ந்து!

## கடனுதவி

ஸ்ரீ ஹரிகோட்டா விண்வெளி ஆராய்ச்சி நிலைய அபிவிருத்திக்காக ஆராய்ச்சி நிலையத்தின் எல்லையை ஒட்டி இருந்த கிராமங்களை காலிசெய்து மைய அரசு வெளியேற்றியது. வெளியேற்றப்பட்ட மீனவ மக்களை பழவேற்காடு பகுதியில் கோட்டைக்குப்பம் ஊராட்சியில் இரண்டு கிராமத்தையும் அகரம் ஊராட்சியில் தேவம்பட்டு அருகில் ஒரு கிராமத்தையும் மீதம் உள்ள கிராமங்களை வங்க கடற்கரைக்கு பழவேற்காடு ஏரிக்கும் இடையேயுள்ள லைட் ஹவுஸ் குப்பம் பகுதியில் குடி அமர்த்தப்பட்டனர். ஐ ஆர் டி பி திட்டத்தின் கீழ் இவர்களுக்கு மீன்பிடி வலைகள் வாங்குவதற்கு 2,000 ரூபாய் வீதம் புதிய ... பழைய ... களுக்கு 500 ரூபாய் வீதம் ... பேருக்கு வழங்கப்பட்டுள்ளது.

என். ஆர். இ. பி. திட்டத்தின் கீழ் பள்ளிபுரம் அரவாக்கம், கிளிக்கோடி போன்ற இடங்களில் 6 லட்சத்து 8 ஆயிரம் செலவில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளது.

தாய்சேய் நல பராமரிப்பிற்கென இப்பகுதியில் போதிய வசதி வாய்ப்புகள் இல்லாமல் இருந்தது. புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்புக்கு வந்தபிறகு இந்த நிலை முற்றிலுமாக மாறி கோலூர் லைட் ஹவுஸ்குப்பம் சின்னமாங்கோடு போன்ற பகுதிகளில் மொத்தம் 11 லட்சத்து 25 ஆயிரம் ரூபாய் செலவில் தாய்சேய் நல விடுதிகள் அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

## சாலைவசதி

இந்த பொன்னேரி பகுதிக்கு இதுவரை 3 கோடியே 25 லட்சத்து 785 ரூபாய்க்கு கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் சாலை பராமரிப்புப்பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. வல்லூர் காலனி இலவம்பேடு மெலூர், புங்கம்பேடு அனுப்பம்பட்டு தொட்டிமேடு போன்ற பல இடங்களில் சத்துணவு கூடங்கள் அமைக்கப்பட்டு சிறந்த முறையில் நடைபெற்று வருகின்றன.

கோடை காலங்களில் ஏற்படும் வறட்சி நிலையை முன் கூட்டியே கருத்தில் கொண்டு உறைகிணறுகள் பல்வேறு பகுதிகளில் அமைக்கப்பட்டுள்ளன.

மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டிகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. சுமார் 3 கோடியே 47 லட்ச ரூபாய் செலவில் இப்பணிகள் முடிக்கப்பட்டுள்ளன.

தமிழ்காலனி வள்ளுவர் ரோடு அத்திக்குளம் சுப்பிரமணிய நகர் போன்ற பகுதிகளில் குடிநீர் விஸ்தரிப்பு பணிகள் நடந்து வருகிறது.

சாலைகள் பராமரிப்பு பல்வேறு பகுதிகளில் பொதுமக்களுக்கு தேவையான அத்யாவசிய பொருட்கள் கிடைக்க வேண்டும் என்பதற்காக கடைகள் கட்டிக் கொடுத்தல் மீன் மார்க்கெட் காய்கறி மார்க்கெட் அமைத்துக் கொடுத்தல் போன்ற பணிகள் சிறப்பாக நடந்துள்ளன.

1976-77 ஆம் ஆண்டில் 33 ஆயிரம் ரூபாய் செலவில் குடிநீர் பைப்லைன்கள் போடப்பட்டுள்ளன.

நடப்பு ஆண்டில் ரூபாய் 51 லட்சம் செலவில் எல் ஐ சி நிறுவனத்தின் உதவியின் கீழ் மேல்நிலைத் தொட்டிகள் மூலம் நீர் வழங்கும் பணிகள் மும்முரமாக நடைபெற்று வருகின்றன.

இப்பகுதியில் வறட்சி நிவாரணத்திட்டத்தின் கீழ் போர்க்கால அடிப்படையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. 40 லட்ச ரூபாய் செலவில் பாரதி நகர் பெரியகாவணம் ஆற்றங்கரை ஆகிய பகுதிகள் குடிநீர் கைபம்புகள் அமைத்துத் தரப்பட்டுள்ளது. திருவாயற்பாடி கூடுகாடு எம் ஜி ஆர் நகர் ஆகிய பகுதிகளிலும் கைப்பம்புகள் அமைத்துத் தரப்பட்டுள்ளன.

சோழவரம் ஒன்றியத்தில் மணல் நகரில் காவல் நிலையம் மருத்துவமனை கட்டிடம் பேருந்து நிலையம் ஆகியவை கட்டப்பட்டுள்ளது. மதுவிலக்கு அமல்பிரிவு பொன்னேரியில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

15 ஆண்டுகளுக்கு மேல் முடிக்கப்படாமல் உள்ள நாப்பாளையம் பாலம்பணிகள் நடைபெற உள்ளன.

தீயணைப்பு நிலையம் ... லட்ச ரூபாய் செலவில் ஆதிதிராவிடர் மாணவர் விடுதி 2 லட்ச ரூபாய் செலவில் ஆதிதிராவிடர் சமூக நல கூடம் 20 லட்ச ரூபாய் செலவில் பழவேற்காடு சுற்றுலா மையம் அமைக்கப்பட உள்ளது. பழவேற்காடிலிருந்து கலங்கரை விளக்கம் குப்பம் வரை 65 லட்ச ரூபாய் செலவில் நடைபாதை மேம்பாலம் அமைக்கப்பட உள்ளது.

புரட்சித் தலைவரின் ஆட்சியில் பொன்னேரி தொகுதி பிரமிக்கத்தக்க வகையில் வளர்ச்சியடைந்துள்ளது.

புரட்சித் தலைவர் சொன்னது போல ஒவ்வொரு தொகுதியும் அவரது தொகுதிதான். ஒவ்வொரு தொகுதியின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் அவர் காட்டிவரும் ஆர்வமும் ஈடுபாடும் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துகிறது.

# காஞ்சி தலைவனின் கருவறை!

செங்கையே!
கங்கையைப்போல் காவிரிபோல்
கருணை மழை பொழிந்து
தென்புலம் காக்கும்
பொன்மனச்செம்மலின்
செங்''கை'யா நீ?
அந்த செங்கைக்கு
ஆகுபெயரா?
செந்தமிழ் செங்கையே!
நீ-
ஆன்றோர் பலரை ஈன்ற
சான்றோரின் பாசறை!
பைந்தமிழ்ப் பாக்களைகளின்
பட்டறை!
நீ கல்லின் கவிதையா?
பல்லவனின் புலிக்குகையா?
ஓ!
கலைகளின் கலங்கரையே!
நீ
காஞ்சித்தலைவனின் கருவறை!

-புலவர் சேமுசா
ஆவடி

செங்கை மாவட்டத்தில் உள்ள பேரூராட்சிகளின் குடிநீர் திட்டத்திற்காக முன்பணமாக குடிநீர் வாரியத்திற்கு ரூபாய் 18.01 லட்சத்தை முதல்வர் புரட்சித்தலைவரிடம் மாவட்ட ஆட்சித்தலைவர் பி. பாண்டியன் வழங்கினார்

## பெருநிலவின் பேரொளி...

: காஞ்சி பல்லவரசு :

பொங்கிப் பெருகி வரும்
பெரு நிலவின் பேரொளியாம்
எங்கும் எழுந்து நிற்கும்
எண்ணற்ற தொழில் களெல்லாம்

ஊரக வளர்ச்சி தன்னில்
உயர்ந்து நிற்கும் ஊர்களுமே
பார் போற்றும் புரட்சியாரின்
பாங்கு மிகு சான்றுகளே!

மாவட்டம் பாய்ந் திருக்கும்
பைந்தமிழ்த் திரு மண்ணில்
மாவட்ட செங்கி லுமே
மலர்ந்திட்ட தொழில் களெல்லாம்

அண்ணாவின் பூமி தன்னில்
அவர் தந்த இதயக்கனி
கண்ணான நம் தலைவர்
காணச் செய்த சாதனையே

## வள்ளலை மனதார வாழ்த்துவோம்

இதய தெய்வம் புரட்சித்தலைவர் அருட்கொடையால் காஞ்சி மாநகரில் மாவட்டக்குற்றவியல் நீதிமன்றம மாவட்ட முன்சீப் நீதி மன்றம் அமைந்தது சிறப்புக்குரிய செயலாகும்.

இந்த நீதி மன்றங்கள் அமைப்பதை முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் நேரில் வந்து பார்வையிட்டு எப்படி எப்படி அலுவலகக் கட்டிடங்களை அமைக்க வேண்டும் என்று ஆணையிட்டார்.

கழக ஆட்சியின்வரலாற்றில் காஞ்சித்திருநகரில் இந்தநீதிமன்றங்கள் இன்று ஒளியோடு காட்சியளிக்கிறது.

செங்கை மாவட்ட மக்களின் விருப்பம் அறிந்து செயலாற்றும் ஓர் தலைவர் உத்தமத் தலைவன் புகழ் நிலைக்க செங்கைமாவட்ட மக்கள் தயாராக இருக்கின்றனர்.

1972ல் புரட்சித் தலைவர் பெயரில் நெசவாளர்கள் ஒரு கைத்தறி சங்கம் அமைக்க அனுமதி கோரினர்.

அன்றைய தினம் ஆட்சியில் இருந்தவர்கள் எம். ஜி ஆர். பெயரில் கைத்தறி சங்கமா? கூடவே கூடாது என்று மறுத்து விட்டனர்.

ஆனால் கழக நண்பர்களும் நெசவாளப் பெருமக்களும் குறிப்பாக காஞ்சி பாலாஜியும் முழு முயற்சி எடுத்து வாரி வழங்கும் வள்ளல் பெயரால் வள்ளலார் கைத்தறி சங்கம் என்று அமைத்தனர் இன்று அந்தச் சங்கம் காஞ்சியில் வேறு எந்த கைத்தறிசங்கமும் பெறாத வளர்ச்சியைப் பெற்று குளிர்சாதன வசதியுடன் விளங்குகிறது.

நெசவாளர் குடும்பங்களுக்குவாரி வழங்கும் வள்ளல சாதனைக் கிரீடத்தின் இந்த வள்ளலார் கைத்தறி சங்கம் முத்தாக ஒளி வீசிக் கொண்டிருக்கிறது.

# மாவட்ட ஊரக வளர்ச்சி நிறுவனம்

## செங்கற்பட்டு மாவட்டம், காஞ்சிபுரம்

இச்சங்கத்தின் முக்கியபணிகள் வறுமைகோட்டிற்கு கீழே உள்ள மக்களின் வாழ்க்கையை மேம்படுத்த திட்டமிடுதல். செயல்முறைகளை ஏற்படுத்துதல் மற்றும் செயலாக்கம் செய்தலாகும். வறுமையை ஒழிப்பதற்காக வேலை வாய்ப்பு கிடைக்கவும் வழிவகை செய்வதாகும். இம்முகமையின பத்தாண்டு சாதனைகளின் விவரம் வருமாறு:

| வ.எண் | திட்டம் | பயனடைந்தோர் எண்ணிக்கை | செலவிடப்பட்ட மானயம் [ரு. இலட்சத்தில்] |
|---|---|---|---|
| 1. | ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டம் : | | |
| அ. | பயன் அடைந்த குடும்பங்களின் எண்ணிக்கை | 1,43,783 | |
| ஆ. | இதில் ஆதிதிராவிடர்மற்றும் பழங்குடியினர் | 64,857 | 1523.97 |
| இ. | இதில் பெண்கள் | 39,970 | |
| 2. | சிறு-குறு விவசாயிகள் மேம்பாட்டுத் திட்டம் : | | |
| அ. | பயனடைந்த சிறு-குறு விவசாயிகளின் எண்ணிக்கை | 13,233 | |
| ஆ. | பயனடைந்த நிலத்தின் பரப்பளவு | 11,875ஹெக்டேர் | 333.12 |
| 3 | ஊரக நிலமற்றோர் வேலைவாய்ப்பு உறுதித்திட்டம் : | | |
| அ | முடிக்கப்பட்ட வேலைகளின் எண்ணிக்கை | 4,621 | |
| ஆ. | ஏற்படுத்தப்பட்ட மனிதசக்தி நாட்கள் | 47.80 லட்சம் | 1075.92 |
| 4 | தேசிய ஊரக வேலைவாய்ப்புத் திட்டம் : | | |
| அ | முடிக்கப்பட்ட வேலைகளின் எண்ணிக்கை | 19,972 | |
| ஆ. | ஏற்படுத்தப்பட்ட மனித சக்தி நாட்கள் | 140.10லட்சம் | 1699 |

காஞ்சிபுரம்
10-8-87




மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் முகமைத் தலைவர்

# பொது இராணுவம் துறை

அரசாணை [நிலை] எண். 1250
நாள் 7.8.87

## நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின்-4 ஆம் பிரிவின் கீழான

## அறிவிக்கை

வடாற்காடு மாவட்டம், அரக்கோணம் வட்டம். 92 செய்யூர் கிராமத்தில் அமைந்துள்ளதும் கீழ்க்காணும் விவர அட்டவணையில குறிப்பிட்டுள்ளதுமான நிலங்கள் ஒரு பொதுநோக்கத்திற்காக அதாவது கடற்படை விமான தள விரிவாக்கப்பணிக்கு தேவைப்படுகின்றன என்று தமிழ்நாடு அரசுக்குத் தோன்றுவதால், அந்தப் படிக்கு 1894-ஆம் ஆண்டைய நில கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச சட்டம 1-1894) 4 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் விதித்துறைகளுக்கிணங்க தொடர்புடைய அனைவருக்கும் இதன் மூலம் அறிவிப்புஅளிக்கப்படுகிறது அகவே மேற்சொன்ன சட்டத்தின் 4 ஆம் பிரிவின் (2) ஆம் உட்பிரிவின் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களைச் செலுத்தும் பொருட்டு அரக்கோணம் கடற்படை விமானதள நில ஆர்ஜித சிறப்பு வட்டாட்சியர் அலகு-1 என்பவருக்கும் அவருடைய பணியாளர் தொழிலாளர் ஆகியோருக்கும் தமிழ் நாடு ஆளுநர் அவர்கள் இதனால் அதிகாரமளிக்கிறார்,

விவர அட்டவணை

வடாற்காடு மாவட்டம் அரக்கோணம் வட்டம்
செய்யூர் கிராமம்:

| நன்செய் அல்லது புன்செய் என்பதும் புல எண்ணும் 1 | நில சொந்தக்காரர் அல்லது சொந்தக்காரர்கள் [பட்டாதாரர்] அனுபவதாரர் பெயர் 2 | கையகப்படுத்த உள்ள பரப்பளவு [ஹெக்டேர்] 3 | தீர்வை அல்லது மரங்கள் கட்டிடங்கள் ஆகியவற்றின் விவரம் 4 |
|---|---|---|---|
| புஞ்சை 440-1 | 1. கெங்காதரன் 2 நந்தன் 3 பக்தன் 4 தாமோதரன். 5. தனபால் 6 வச்சலா தபெ துரைசாமி பிள்ளை வத்சலா க-பெ நரசிம்மபிள்ளை | 0.16 0 | பயிரிடத்தக்கது |
| புஞ்சை 440-2 | 1. சீனுபிள்ளை 2, பார்குணன் 3. செல்வம் த-பெ ஆத்தூர் கோதண்டம் பிள்ளை 4. செயலாளர் கிராம கூட்டுறவு கடன் சங்கம் செய்யூர் | 1,29,0 | வேப்பஞ் செடி 6 வேப்பமரம் 1 முருங்கை மரம 1 பனைமரம் 65 கொடுக்காபுளி மரம் 1 வட்டக் கிணறு 1 |
| புஞ்சை 441-1ஏ | 1. கெங்காதரன் 2. நந்தன் 3 பக்தன் 4. தாமோதரன் 5 தனபால் 6 வத்சலா [க பெ நரம்சிம்ம பிள்ளை] த-பெ துரைசாமி பிள்ளை 7. செயலாளர், நில அபிவிருத்தி வங்கி, அரக்கோணம் | 0,62.5 | பயிரிடத்தக்கது |
| புஞ்சை 442-1எ | 1. கெங்காதரன் 2, நந்தன் 3. பக்கன் 4. தாமோதரன் 5. தனபால் த-பெதுரைசாமி பிள்ளை 6. வத்சலா க-பெ நரசிம்மபிள்ளை 7. சண்முகம் த-பெ முனுசாமிபிள்ளை | 1,72,5 | ,, |
| புஞ்சை 442 2 | 1. தனபாக்கியம் மாள் 2. பக்தன் 3. கெங்காதரன் 4. நந்தன் 5 தாமோதரன் 6 தனபால் 7 வத்சலா தபெதுரைசாமி பிள்ளை | 1,09 5 | பயிரிடத்தக்கது அரசமரம் 1 ஆலமரம் 1 வேப்பமரம் 4 ஈச்சமரம் 3 பனைமரம் 3 வேப்பஞ் செடி 4 சதுரகிணறு 1 மின்சார பம்ப் செட் 1 5 குதிரை மின் சார பம்ப் செட் 1 |
| புன்செய் 443-2 | சரோஜா அம்மாள் க-பெ சுப்பிரமணி | 0,39 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 444-1பி | பூதான் போர்டு | 0 67 5 | ,, |
| புன்செய் 444 2ஏ | சரோஜா அம்மாள் க-பெ சுப்பிரமணி | 1 04 0 | ,, |
| புஞ்சை 444-5 | சரோஜா அம்மாள் க-பெ சுப்பிரமணி | 0,84 0 | தென்னை மரம் 18 வேப்பமரம் 1 வேப்பமரம் 5 கொடுக்காபுளிமரம் 35 புங்கமரம் 1 தொணாமரம் 4 சதுர கிணறு 1 மின்சார பம்ப் செட் 15 குதிரை மின் பம்ப் செட் கூரை வேய்ந்தமண் சுவர் வீடு 1 பாழடைந்த கூரையில்லா மாட்டுக் கொட்டகை |
| புஞ்சை 447-1 | 1. ரத்தின ஆச்சாரி 2. திருவேங்கிட ஆச்சாரி தபெ ரத்தின ஆச்சாரி 3 பச்சையம்மாள் தபெ ரத்தினஆச்சாரி (கபெ கோபால் ஆச்சாரி) | 0 45,0 | பயிரிடத்தக்கது |
| புஞ்சை 447-3 | 1 ரத்தின ஆச்சாரி 2 திருவேங்கிட ஆச்சாரி த-பெ ரத்தின ஆச்சாரி 3. பச்சையம்மாள் தபெ ரத்தினஆச்சாரி க பெ கோபால் ஆச்சாரி | 0,53 0 | பயிரிடத்தக்கது |
| | மொத்தவிஸ்தீரணம் அல்லது | 8 49 0 20.98 | ஹெக்டேர் ஏக்கர் |

லால்ராவ்ணா சைலோ
இணைச் செயலாளர்

டி ஐ பி ஆர் 206 என் ஏ 87 சடி

# ஈழத்தமிழர்களுக்கு இனிய வாழ்வு [3]

# இந்திய வீரர்களுக்கு தமிழர்கள் வரவேற்பு

-:அ. பொ. நாராயணன்:-

யாழ்ப்பாணம் மாவட்டம் சுதுமலையில் நடந்த பொதுக்கூட்டம் மாலை 5.30க்கு எல்லாம் முடிவடைந்து விட்டது. பத்துலட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் திரண்ட கூட்டமாயிற்றே. கூட்டத்தினர் கலைந்து போகவே ஒன்றரை மணி நேரத்திற்கும் மேலாகி விட்டது அந்த ஒன்றரை மணி நேரத்தையும் செய்தியாளர்கள் பயன்படுத்திக் கொண்டோம்

சுதுமலை மாரியம்மன் கோவில் மிகவும் சக்தி வாய்ந்தாம் நம் ஊரில் வசதிவாய்ப்புள்ள கோவில் எப்படியிருக்குமோ அப்படி கோபுரங்கள் கோட்டை சுவர்கள், தேர்களை சகிதம் கோயில் காட்சி அளித்தது அதன் அருகில ஆங்காங்கே உள்ள திண்டுகள். மேடைகளில் உட்கார்ந்து கொண்டு பேட்டி கண்டோம்.

ஈழப் போராளிகள் இந்த உடன்பாட்டை அவ்வளவு பெரிதாக மதிக்கிறார்கள் என்று சொல்ல முடியாது ஆனால் தான உண்டுதன் தொழில் உண்டு என்று இருக்கிற பெரும்பான்மையான தமிழ்மக்கள் இந்த உடன்பாட்டை பெரிதும்மதித்துப்போற்றினர், தங்களுக்குப் புதுசாலைகளில் ஒரே வாழ்வு கிட்டி விட்டதாய் அவர்கள் ஆனந்தப்பட்டனர் இந்திய ராணுவ வீரர்கள் வேலைகளில் நின்றிருந்ததைப் பார்த்து பொதுக்கூட்டம் முடிந்து கலைந்து சென்று கொண்டிருந்த பொதுமக்கள் கையெடுத்துக் கும்பிட்டது உருக்கமாக இருந்தது

இந்திய ராணுவம் அங்கே முகாமிட்டிருப்பதால் தங்களுக்கு இனி ஆபத்து இல்லை என்று கருதி ஈழத்தமிழர்கள் மகிழ்ச்சி அடைந்தனர் பொடியன்கள [போராளிகள்] ஆயுதங்களை ஒப்படைச்சிடறது தான் நல்லது என்று சுதுமலையில பல பெரியவர்கள் கூறினர். எம் ஜி ஆரை மறக்க முடியாது இந்த நிம்மதி அவரால் வந்தது தான இந்தியன் பிரைம் மினிஸ்டரும் ரொம்ப உதவி இருக்கார், என்றார்கள்

பின்னர் சுதுமலையிலிருந்து இராணுவவேனில் பலாலி நோக்கி பயணமானோம் வரும்போது வெறிச்சென்று கிடந்த போக்குவரத்து நெரிசல் பொதுக்கூட்டத்திற்கு வந்து விட்டு திரும்பும் கூட்டம்தான் அது சைக்கிள்கள் மோட்டார் சைக்கிள்களில் துணை மயிலோடு துடிக்கும் மகிழ்ச்சியுடன் சென்ற இளைஞர்கள் ஒரே சைக்கிளில் மூன்று நான்கு பேர். நம் ஊர் பாணியில் சர்க்கஸ் நடத்திக் கொண்டு சென்ற இளைஞர்கள் இப்படி விதவிதமான மனிதப்பூக்கள் அந்திநேரம் வருமுன் இல்லத்திற்கு முந்தச்செல்ல முனைந்து கொண்டிருந்தனர்

அவர்களைத் தொடர்ந்து சென்ற எங்களது வேனைப்பார்த்து உள்ளே இருந்த துப்பாக்கி ஏந்திய சிப்பாய்களுக்கு டாட்டா காட்டிய ஈழத் தமிழர்கள் எண்ணிக்கை கணக்கிலடங்கா.

வேனை ஓட்டியவர் இந்திய இராணுவ வீரர் பலாலி விமானதளத்துக்கு வர அவருக்கு வழி தெரியவில்லை எட்டு மைல் தூரத்தை வேன் கடப்பதற்கு நாலரைமணி நேரத்திற்கு மேலாகி விட்டது பல்வேறு சிற்றூர் பேரூர்களையெல்லாம் சுற்றி அடித்தோம்

வேன் வந்ததைப்பார்த்த சில ஊர்களில் சிங்கள ராணுவம் தான் தாக்க வந்துவிட்டதோ என்று அஞ்சி ஓடினர் பழைய பீதி இன்னும ஓயவில்லை என்பதைப் புரிந்து கொண்டோம்

இந்தப் பகுதிகளில் எல்லாம் பெரிய கலாட்டா நடந்தது குண்டுகள் எல்லாம் வீசப்பட்டன பல இடங்களில் கண்ணி வெடி வைக்கப்பட்டிருந்தன இப்போது கூட திடீர் திடீர் என்று பூமிக்குள் வைக்கப்பட்ட கண்ணி வெடிவெடிக்கிறது கவனமாகப் போங்கள் கண்ணி வெடி வெடித்து விடக்கூடும் என்று சில ஊர்களில் பொதுமக்கள் எங்களை எச்சரித்தனர்.

மிலிட்டரி ஜீப்பில் நமது இந்திய ராணுவ அதிகாரிகள் சென்று கொண்டிருந்தனர் பயம் அவ்வளவாக இல்லை

சிறிது நேரத்தில் அந்த ஜீப்முந்திவிட எங்கள்வேன் வழி தெரியாமல் வேறு பக்கம் போய் விட்டது ஆங்காங்கே சுற்றி விட்டு பலாலி விமானதளத்துக்கு இரவு 10 மணிக்கு வேன் வந்து சேர்ந்தது

(தொடரும்)

# இந்திய ராணுவத்திடம் போராளிகளின் ஆயுதம் அனைத்தும்ஒப்படைப்பு

யாழ்ப்பாணம் ஆக 20- விடுதலைப்புலிகள் தங்களிடம இருந்த ஆயுதங்கள் அனைத்தையும் ஒப்படைத்து விட்டதாக அறிவித்துள்ளனர்

இது குறித்து விடுதலை புலிகள் தெரிவித்திருப்பதாவது:-

தமிழீழ விடுதலைப்புலிகள தங்களிடமிருந்த சகல ஆயுதங்களையும் பலாலி உட்பட தமிழ்ப் பகுதிகளில் உள்ள ராணுவ முகாம்களில் நேற்று ஒப்படைத்து விட்டனர்

இந்திய அரசின் வேண்டுகோளுக்கிணங்கவே இந்த ஆயுதங்கள ஒப்படைக்கப்பட்டன இப்பொழுது விடுதலைப் புலிகளிடம் எவ்வித ஆயுதங்களும் இல்லையென்பதை தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் பிரிவுப் பொறுப்பாளர் திலீபன் யாழ்ப்பாணத்தில் தெரிவித்தார் பலாலி விமான நிலையத்தில் மட்டும் 15 வாகனங்கள் நிறைந்த ஆயுதங்கள் ஒப்படைக்கப்பட்டன,

இன்று ஏற்பட்டுள்ள அரசியல் சூழ்நிலை காரணமாக விடுதலைப் புலிகளால் அறிவிக்கப்பட்டு வந்த அனைத்து வரிகளும் அறவீடுகளும் இன்று முதல வசூலிக்கப்படமாட்டாது

இதுபற்றி எமது இயக்கம் யாழ்ப்பாணத்தில் அறிக்கை ஒன்றை வெளியிட்டுள்ளது அந்த அறிக்கையில் மேலும் கூறப்பட்டுள்ளதாவது

பொதுமக்கள் எம்மால் ஏற்கனவே வரி விதிக்கப்பட்டிருந்த பொருட்களை இனியேல் கொள்வனவு செய்யும்போது விலைகள் குறைக்கப்பட்டு நிர்ணய விலையில் விற்கப்படுகின்றதா என்பதையும் உறுதி செய்து பொருட்களை வாங்குமாறு கேட்டுக் கொள்கிறோம் மேற்குறிப்பிட்ட தேதியிலிருந்து எமது உறுப்பினர்கள் எவரும அறவீடுகள் எதையும் மேற்கொள்ள மாட்டார்கள்

அதேசமயம் யாராவது எமது பெயரை துஸ்பிரயோகம் செய்து அறவீடுகளில் ஈடுபட்டால் எமக்கு அறியத்தருமாறு வேண்டுகிறோம் எமது சார்பில் வரி அறவீடு செய்த வியாபார நிறுவனங்கள் இம்மாதம் பது தேதி தொடக்கம் வரி அறவிட வேண்டாம் என்று எம்மால் அறிவுறுத்தப்படுகின்றீர்கள் இவ்வாறு அவ்வறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது

## இந்திய பெருங்கடலில் இந்தியாவுக்கே அதிக உரிமை: ஐ நா சபை அறிவிப்பு

ஐக்கிய நாடுகள் சபை ஆக.20-

இந்திய பெருங்கடல் பகுதியில இந்திய நாட்டுக்கு அதிக உரிமை உள்ளது என்று ஐக்கிய நாடுகள் சபை அறிவித்திருக்கிறது

பாரம்பரிய அடிப்படையில் நீண்ட நெடுங்காலமாக இந்திய பெருங்கடலில இந்தியாவுக்கு அதிக ஆதிக்கம் இருப்பதாக ஐ நா சபை பதிவு செய்தது சுமார் 52 ஆயிரம் சதுர கிலோ மீட்டர் பரப்பளவுக்கு இந்தியநாடு இந்திய பெருங்கடலில் ஆதிக்கம் செலுத்த உரிமை வழங்கப்பட்டுள்ளது.

ஐக்கிய நாடுகள் சபையின் முடிவை சோவியத் ரஷ்யாவும். சீனாவும் வரவேற்றிருக்கின்றன

கடல் பகுதியில் இத்தகைய உரிமை வழங்கப்பட்டிருப்பதை ஆஸ்திரேலியா உட்பட பல்வேறு நாடுகளும் வரவேற்றிருக்கின்றன

## திருமணம்

சென்னை ஆக 20-

சென்னை பழைய மாம்பலம் தேவராதன் குமாரன் பஞ்சநாதனுக்கும் சண்ணம்மா பேட்டை காத்தவராயன் குமாரத் சுலோசனாவுக்கும் நாளை 21ந் தேதி காலை 6 மணிக்கு மேல் 7 30 மணிக்குள் திருமணம் நடைபெறுகிறது இத்திருமணம் சைதாப்பேட்டை தாடண்டநகர் சமூகநல கூட திருமணமண்டபத்தில் நடைபெறுகிறது

# ஓடும் ரயிலில் நகை திருட்டு: போலீஸ்காரருக்கு 15 நாள்காவல்

சென்னை, ஆக. 20-

ஓடும் ரயிலில் பயணி ஒருவரிடம் துணிகரமாக தங்கசங்கிலி கைக் கடிகாரம் ஆகியவற்றை திருடிய போலீஸ்காரர் ஒருவர் 15 நாள் ரிமாண்டில் வைக்கப்பட்டார்

ராணுவத்தில் வேலை பார்ப்பவர் ஜார்ஜ் பிலிப் வயது 30 சென்னையை அடுத்த தங்கநல்லூரில் வசித்துவருகிறார்.

சம்பவத்தன்று பல்லாவரத்தில் இருந்து சென்னைக்கு மின்சாரரெயிலில் புறப்பட்டார் வண்டி ஓடிக் கொண்டிருக்கும் போது ராஜ்குமார் வயது 25 என்பவர் அந்தரெயிலில் ஏறிக் கொண்டார்.

அவருடன் வேறொரு வாலிபனும ரெயிலில தொத்தக் கொண்டார் அவரது பெயர் ரவி (வயது 18

ராஜ்குமாரும் ரவியும் சேர்ந்து ராணுவ வீரர் ராஜ்குமாரின தங்கச் சங்கிலி மற்றும் கைக் கடிகாரம் ஆகிவற்றை பறித்துக் கொண்டு ஓடி விட்டனர்.

இது பற்றிய புகாரைத் தொடர்ந்து தாம்பரம் போலீசார் திருடர்களை வலைவீசித் தேடிவந்தனர்

சந்தேகத்தின் பேரில் சிக்கியரவியை விசாரித்ததில் துப்பு துலங்கியது ராஜ்குமாரும் ரவியும் கைது செய்யப்பட்டனர்.

பல்லாவரத்தைச் சேர்ந்தவர் ராஜ்குமார். தாம்பரம் ரெயில்வே போலீசில் போலீஸ்காரராக பணியாற்றி வருகிறார் ரவியும் அந்த போலீஸ் ஸ்டேஷனில் எடுபிடி வேலை செய்து வருகிறார் இருவரும் திட்டமிட்டு இந்த திருட்டை நடத்தினார்களாம்

ராஜ்குமாரும், ரவியும் சைதாப்பேட்டை மாஜிஸ்திரேட் கோர்ட்டில் ஆஜர் படுத்தப்பட்டனர்

இருவரையும் 15 நாள் ரிமாண்டில்வைக்க மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார்

## திருமணம்

சேலம் மாவட்ட அண்ணாதொழிற் சங்கத் தலைவர் எம் முனியப்பனின்மகள் விஜயாவுக்கும் பள்ளப்பட்டி இராஜமாணிக்கத்திற்கும் திருமணம் 21ம் தேதி அழகாபுரம் ஸ்ரீரத்தினவேல் கவுண்டர் திருமண மண்டபத்தில் நடைபெறுகிறது

மணவிழாவுக்கு கழகத்தின் முத்த துணைப் பொதுச்செயலாளர் எஸ் இராகவானந்தம்தலைமை வகிக்கிறார்

மணவிழாவில் அமைச்சர் சவுந்தரராசன் முன்னாள் அமைச்சர் விஜயலட்சுமி பழனிச்சாமி திட்டக்குழு துணைத் தலைவர் பாவலர் முத்துசாமி மற்றும் கண்ணப்பன் எஸ். பி. ஆகியோர் கலந்து கொள்கின்றனர்

# சமூக நலத் துறை

அரசாணை (நிலை) எண் 1421
நாள் 13-8-87

## நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6ம் பிரிவின் கீழான விளம்பல்

## அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மன நிறைவடைந்திருப்பதோடு. அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாயிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கெனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894ம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மைய சட்டம் 1-1894) 6-ஆம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 0.50 5 எக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொதுநோக்கத்திற்காக அதாவது ராமாபுரம் மதுரா சாத்தன் குப்பம் கிராம ஆதிதிராவிடர்களுக்கு வீட்டுமனை வசதிக்காக தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்கள் வரைபடங்கள் கடலூர் ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப் பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம் - தென்னாற்காடு வட்டம்: கடலூர்
கிராமம்: எண், 56 ராமாபுரம்

| நன்செய் அல்லது புன்செய் என்பதும் புல எண்ணும் 1 | நில சொந்தக்காரர் அல்லது சொந்தக்காரர்கள் [பட்டாதாரர்] அனுபவதாரர் பெயர் 2 | கையகப்படுத்த உள்ள பரப்பளவு 3 | தீர்வை அல்லது மரங்கள் கட்டிடங்கள் ஆகியவற்றின் விவரம் 4 |
|---|---|---|---|
| புன்செய் 184-15 | விஜயராகவன் | 0.04.0 | ஹெக்டேர் |
| புன்செய் 194-16 | விஜயராகவன் | 0.04 0 | |
| புன்செய் 194-17பி | பேபி அம்மாள் | 0.20 5 | ஹெக்டேர் |
| புன்செய் 196-5பி | பட்டம்மாள் | 0.22.0 | ,, |
| | மொத்தம் | 0,50.5 | ஹெக்டேர் |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்

டி. ஐ பி. ஆர்-334-எஸ், ஏ-87-எவிகண்டு

# எழுது பொருள் மற்றும் அச்சுத்துறை இயக்கம்

816 அண்ணாசாலை
சென்னை 600002
இயக். எண் கொ. 2 6535-87
நாள் 14 8 1987

## ஒப்பந்தப் புள்ளி அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநர் அவர்களின் சார்பாக கீழ்காணும் இயந்திரங்கள் வழங்குவதற்கு ஆகக்கு முத்திரையிட்ட ஒப்பந்தப்புள்ளிகள் கீழே குறிப்பிட்டுள்ள தேதி விவரப்படி பிற்பகல் 3.00 மணிவரை பதிவு அஞ்சல் மூலம் மட்டுமே பெற்றுக் கொள்ளப்படும்.

| வ எண் | விவரம் | தேவையான அளவு எண்ணிக்கை | கெடு தேதி |
|---|---|---|---|
| 1 | பகுதி தானியங்கி ஹாண்ட் பெட் லெட்டர் பிரஸ் சிலிண்டர் பிரிண்டிங் இயந்திரம் ஆர். ஏ. 11 வடிவம் | 4 | 29 9 87 |
| 2 | ரோட்டரி நம்பரிங் இயந்திரம் 20 எண்ணிலும் பெட்டிகளும் | 1 | 6 10 87 |
| 3 | எலக்ட்ரானிக் தட்டச்சு [மெமரியுடன்] | 2 | 7. 10 87 |
| 4 | செங்குத்து காமிரா | 1 | 8 10 87 |
| 5 | பிரிண்டிங் டவுன் பிரேம் | 1 | 8 10 87 |
| 6 | சிங்கள் கலர் ஆப்செட் பிரிண்டிங் இயந்திரம் ஆர் ஏ 2வடிவம் | 2 | 9 10 87 |
| 7 | வெப் ஆப்செட் பிரிண்டிங் இயந்திரம் இரண்டு ரீல்கள ஆர் ஏ. 2 வடிவம் மற்றும் எண்ணிடும் பகுதியுடனும் 40 எண்ணிடும் பெட்டிகளுடன் | 1 | 13 10 87 |
| 8 | 65 எம் எம் இருதலை கப்பியினால் தைக்கும் இயந்திரம் | 1 | 14.10 87 |

முழு விவரங்கள் அடங்கியஒப்பந்தப்புள்ளி அறிவிப்பினை பெற விரும்புவோர் 817 அண்ணாசாலை, சென்னை - 600002ல் உள்ள அரசினர் வெளியீடுகள விற்பனை நிலையம் உதவி இயக்குநர் அவர்களிடமிருந்து ரூபாய் 5 30 (வரிகள் உட்பட செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம் இந்த அறிவிப்பினை பதிவு அஞ்சலில் பெற விரும்புவோர் நாட்டுடைமையாக்கப்பட்ட ஏதேனும் ஒரு வங்கியிலிருந்து ரூ 13க்கான பேற்றுரிமை சீட்டை [டிடி] மேற்படி உதவி இயக்குநரின் பெயருக்கு அனுப்பி பெற்றுக்கொள்ளலாம்.

இயக்குநர்

சென்னை-600 002
நாள் 14 8, 1987

DIPR: 2045-Ms-87-Efficent

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.



# கழக அரசின் பத்தாண்டு சாதனை

# ★ செங்கை மாவட்ட சிறப்புமலர் ★



## சீர்மிகு செங்கை மாவட்டத்தின் சிறப்பு அம்சங்கள்!

**காஞ்சி!**

ஆம்! இந்த திருப்பெயரை கேட்டாலே திராவிட இயக்கத்தினருக்கும் தமிழ் பெருமக்களுக்கும் நினைவுக்கு வருவது பேரறிஞர் அண்ணா அவர்கள்!

தமிழகத்தின் வரலாற்றை மாற்றியமைத்த அந்த பேரறிஞர் பிறந்த ஊரான காஞ்சிபுரம் செங்கற்பட்டு மாவட்டத்தின் தலைநகராக அமைந்துள்ளது. ஆசியாவிலேயே மிகப் பெரிதான அறிஞர் அண்ணா புற்றுநோய் ஆராய்ச்சி மருத்துவமனையை முதல்வர் புரட்சித்தலைவர் அமைத்திருக்கிறார்கள்

இப்போது மட்டுமல்ல பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகரமே காஞ்சிதான்

பேரறிஞர் அண்ணா பிறந்து வளர்ந்த இல்லத்தை புரட்சித் தலைவர் அரசுடைமையாக்கி நினைவு சின்னமாக்கியுள்ளார்.

அந்த ஊர் பாலாற்றின் கரையில் அமைந்துள்ளது

ஆஸ்திக பெரியவர்கள் வணங்கும் பரமாச்சாரியார்கள் மூவரும் வாழுமதலமும் அது தான்,

இத்தல பெருமைகளை உடைய காஞ்சியில் கால் தடுக்கி விழுந்தால் நாம் விழும் இடமும் ஒரு கோயிலாகவே இருக்கும்! கோவில்கள் நிறைந்த ஊர் காஞ்சி.

அந்த நகருக்குப்பக்கத்தில் பாலாற்றின் மற்றொரு கரையில் உள்ள ஊர் திருமுக்கூடல்!

அங்கு பாலாறு, செய்யாறு வேகவதியாறு ஆகிய மூன்றும் சங்கமிக்கின்றன. அந்த சங்கமத்தின் கரையிலும் ஒரு திருக்கோயில்,

வள்ளியை மணம்முடித்த முருகன் நின்ற இடமும் தமிழகத்தின் வடஎல்லையுமான திருத்தணியும் செங்கற்பட்டு மாவட்டத்தில் தான். இருக்கிறது.

திருத்தணி நகருக்கு பெருமை சேர்த்திருப்பவர் முதல்வர் புரட்சித்தலைவர் அந்த பகுதிக்கு இப்போது ஒரு சர்க்கரை ஆலை அமைத்து விவசாயிகளின் பொருளாதாரத்தை உயர்த்தி இருக்கிறார்.

உத்திரமேரூர்! இது ஜனநாயகத்தின் தாய் வீடு எனலாம இப்போது நடைபெறுகிற ஓட்டுப்போடும் முறை உத்திரமேரூரில் மன்னர்கள் காலத்திலேயே அறிமுகப் படுத்தப்பட்டு விட்டது! மன்னர்கள் காலத்தில் உத்திரமேரூரின் பஞ்சாயத்து ஆட்சி நடைமுறைப் படுத்தப்பட்டு ஆட்சியாளரை தேர்ந்தெடுக்க குடவோலை சீட்டு முறை அறிமுகப் படுத்தப்பட்டு சிறப்பான ஆட்சி நடந்த இடம்!

மதுராந்தகம்! இங்கு தான் மிகப்பெரிய ஏரி அமைந்திருக்கிறது செங்கற்பட்டு மாவட்டத்திலேயே மிகப்பெரிய ஏரி இங்குள்ளது தான் வெள்ளையர் ஆட்சிகாலத்தில் அந்த ஏரி நிரம்பி உடைந்து போகும் நிலை ஏற்பட்ட போது ஏரிக்கரையில் அமைந்துள்ள கோதண்டராமர் சன்னதியில் உள்ள பெருமாள் ஏரி உடையாமல் காத்ததாக வரலாறும் உண்டு மதுராந்தகம் ஏரி உள்ள பகுதி செங்கை மாவட்டத்தின் நெற்களஞ்சியம் எனலாம்.

**திருக்கழுக்குன்றம்**

திராவிட இயக்க வரலாற்றில் இது குறிப்பிடத்தகுந்த இடம். இங்கு தான் புரட்சித்தலைவரின் 'அக்டோபர்' புரட்சி தொடங்கப்பட்டது. திமுகவில் உள்ள நிர்வாகிகள் அனைவரும் கணக்கு காட்ட வேண்டும் என இங்கு புரட்சித் தலைவர் பேசியதன் விளைவு தான் இன்று அனைத்திந்திய அண்ணா திமு கழகம் துவக்கப்பட்டு மாட்சிமைக்குரிய ஆட்சி நடைபெற்றுவருகிறது

இங்கு பன்னெடுங்காலமாக இரண்டு கழுகுகள் தானாக வந்து உணவு சாப்பிடும் சிறப்பு பெற்ற ஊர் இந்த ஊரின் மலையடிவாரத்தில் உள்ள ஒரு வேப்பமரத்தில் மஞ்சள் பூ பூக்கும்! கசப்பு தன்மையற்ற ஒரே மரம் இது! இந்த ஊரில் உள்ள மலையில் பலவித சஞ்சீவி மூலிகைகள் நிரம்ப இருக்கின்றன நோயாளிகள் பலர் தங்கி இருந்து [illegible] சுகம் பெறுகின்றனர்.

சதுரங்கப் பட்டணம்! இங்கு கடற்கரை ஓரத்தில் பழமையான உயர்ந்த இடிந்த கோட்டை உள்ளன. டச்சுக்காரர்களின் தலைமையிடமாக திகழ்ந்த இடம் படிபாடுகள் நிறைந்திருந்தாலும் வியக்கத்தக்க அமைப்புள்ள கோட்டை உள்ளது

அருகேயுள்ள நகரம் கல்பாக்கம் இந்திய விஞ்ஞானிகள் கூட்டு முயற்சினால் உருவாக்கிய அணுமின் சக்தி நிலையம் அமைந்திருக்கும் இடம்!

மாமல்லபுரம் பல்லவ மன்னர்களின் கலை அம்சத்திற்கு தலைசிறந்த இடம் இது கற்களை கதை சொல்ல வைத்திருக்கிறார்கள் சிற்பிகள் மாமல்லபுரம் நாள் முழுதும் பார்த்துக் கொண்டே இருக்க தகுந்த இடம் உல்லாசப்பயணிகளின் உள்ளம் கவர் சிறப்பிடம்!

திருப்போரூர்! குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்பார்கள் அதுபோல் திருப்போரூரில் பால முருகன் குடிகொண்டிருக்கிறார்!

ஆலத்தூர்! புதிதாக இருந்தாலும் ஆசியாவிலேயே மிகப் பெரிய மருந்து தயாரிக்கும் தொழிற்பேட்டை அமைய இருக்குமிடம்! தமிழக அரசின் சாதனைக்கு இது ஒரு மைல் கல்!

கோவளம்! கேரள மாநிலத்திலுள்ளதை போலவே ஏன் அதையும் மிஞ்சும் இயற்கை எழில் கொஞ்சும் கடற்கரை கொண்ட இடம் அது மட்டுமல்ல இஸ்லாமிய சகோதரர்கள் தொழும் புனித இடம்! சிறப்புள்ள தர்கா அமைந்துள்ளது இங்கு இந்து முஸ்லிம் சகோதரர்கள் சேர்ந்தே தொழுகிறார்கள்!

மணலி! இது தொழில் நகரம் [illegible] ஒளி வெள்ளத்தில் எந்திரங்களின் ரீங்காரம் நாளெல்லாம் ஒலித்துக் கொண்டிருக்கும்!

எண்ணூர்! இது மிகப் பெரிய அனல்மின் நிலையம் அமைய இருக்குமிடம் அமைந்திருக்குமிடம்!

கும்மிடிப்பூண்டி இங்கு தமிழக அரசு தொழிற்பேட்டை அமைத்திருக்கிறது அது மட்டுமில்லை இங்கு ஒரு புதிய நகரம் அமைக்கப்பட உள்ளது கழக அரசால்!

திருவள்ளூர்! இங்கு இந்துஸ்தான் மோட்டார் நிறுவனத்தின் தொழிற்சாலை அமைந்துள்ளது வேளாண்மைக்கு சிறப்பு பெற்றுள்ள இடம்.

பொன்னேரி! ஆந்திர மாநிலத்தின் எல்லையை தொட்டும் கிழக்கு கடற்கரை ஓரத்தை தொட்டும் அமைந்திருக்கும் இடம் மீன்பிடி தொழிலும் விவசாயமும் நிறைந்த இடம் பொன்னேரி!

-ஜி. கண்ணன்
-மு. பாலு

## ஏற்றமிகு செங்கை

ந. நித்தியானந்தன்,
முள்ளி குளத்தூர்

**எல்லைகள்**

நேர்வடக்கே நெல்லூராம், நல்லதென்னார் காடுதெற்கே:
சேலம்வடார்க்காடுதான் மேற்கே: திகழும்நல்
வங்க கடல்கிழக்கே வாகாய் அமைந்ததுதான்
செங்கைமாவட்ட மாங் காண்.

**ஆறுகள்**

பொன்னேரி வட்டத்தின் ஆரணி யாறுடன்,
சென்னைக்கு நீர்தரும் சீர்கொற்றலையாறும்,
தங்குநீர்க் கூவம், அடையாறு, பாலாறும்,
செங்கைமா வட்டமாங் காண்.

**ஏரிகள்**

பழவேற் காட்டேரியுடன் செம்பரம் பாக்கந்தான்,
பழவேரி, சோழவரம் புல்லுறை வேடந்தாங்கல்,
மங்கா மதுராந் தகமும் கொள்வாயும்,
செங்கை மாவட்ட மாங்காண்.

**தலங்கள்**

எங்கள் கழுக்குன்றம், ஏற்றமிகு காஞ்சிநகர்,
தங்குபுகழ்ப் போரூர், தணிகை, மருவூரும்,
வங்கக் கடல்மல்லை வாழ்விக்கும் வேற்காடும்,
செங்கை மாவட்ட மாங்காண்,

**தொழிற் சாலைகள்**

வண்டலூரில் வேன் செய்தல்! வண்ண மிகு பேருந்து
எண்ணூரில்! ஏருழவன் சாம்பனகஸ் மணலியிலே
சிங்க சைக்கிள் அம்பத்தூர், சினியாலை பட்டாளம்
செங்கை மாவட்ட மாங்காண்

**மின் நிலையங்களும், தொழிற் பேட்டைகளும்**

அனல் மின் நிலையந்தான் எண்ணூரில், மற்றும்
அணுமின் நிலையம் கல்பாக்கம்- மனத்திலே
தங்கும் தொழிற் பேட்டை அம்பத்தூர் கிண்டியும்
செங்கை மாவட்ட மாங்காண்,

**புலவர் பெருமக்கள்**

தெய்வத் தமிழ் சேக்கிழார் சீர்திகழ்நல
வெண்பாப் புகழேந்தி, நக்கீ தனாரோடு
அந்தகர் வீரராக வர்வாழ்ந்த புகழ்சேர்
செங்கை மாவட்ட மாங்காண்

# ஏழைகளின் இதயவேந்தன் ஏற்றமிகு திட்டங்கள்



பா. அங்கமுத்து
தலைவர்
தமிழ்நாடு
குடிசை மாற்று வாரியம்

## பத்தாண்டு காலத்தில் முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு...

★ ஏழு ஆண்டுகளுக்குள் அரசு ஊழியர்களின் ஊதிய விகிதங்களை திருத்தியமைப்பதற்காக இரண்டு ஊதியக் குழுக்களும், இரண்டு ஒரு நபர் குழுக்களும் நியமிக்கப்பட்டன

★ பத்தாண்டுகள் பணி முடித்த அனைத்து ஊழியர்களுக்கும் தேர்வு நிலை வழங்கப்பட்டு, அதிகப்படியான ஊதிய விகிதம் நிர்ணயிக்கப்பட்டன.

★ இருபது ஆண்டுகள் பணி முடித்த ஊழியர்களுக்கு பதவி உயர்வுக்கு வாய்ப்பு இல்லாத பட்சத்தில்சிறப்பு நிலை அளிக்கப்பட்டது.

★ குறைந்தபட்சம் அடித்தள ஊழியர்களுக்கு அடிப்படைச் சம்பளம் ரூபாய 450 என்று நிர்ணயிக்கப்பட்டது

★ மத்திய அரசு ஊழியர்களுக்கு அமல்படுத்தி வரும் அகவிலைப் படிக் கொள்கையினை தமிழக அரசு ஊழியர்களுக்கு முழுமையாக அமல்படுத்தப்பட்டது.

★ அரசு ஊழியர்களின் பிள்ளைகளை கல்லூரியில் படிக்க வைக்கும் செலவினங்களை ஈடுகட்ட ரூபாய் 1000 கடன் வசதி அளிக்கப்பட்டது.

★ அடித்தள ஊழியர்களின் குழந்தைகள் பள்ளி இறுதி வகுப்பு வரை படிக்க பாடப் புத்தகங்களின் செலவினை அரசு ஏற்றுக் கொண்டது.

★ காது கேளாத அரசு ஊழியர்களுக்கு காது கேட்கும் கருவி பொருத்திக் கொள்ள ஏற்படும் முழுச் செலவினை அரசு ஏற்றுக் கொண்டது.

தமிழ்நாட்டில் வறுமை கோட்டிற்குகீழ் வாழும் மக்களுக்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் அறிவித்ததற்கு இணங்க தமிழக அரசு பெரும் வீட்டு வசதி திட்டத்தின் கீழ் வரும் மூன்று ஆண்டுகளில் 30 லட்சம் வீடுகள் அரசின் பல்வேறு நிறுவனங்களின் மூலம் விரைவாக செயல்படுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின் கீழ் குடிசைப் பகுதிகளில் மூன்றுவித முன்னேற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

குடிசைப்பகுதிகளில் அடிப்படை வசதிகளான குடிநீர் வழங்குதல் கழிவுநீர் வசதி அளித்தல் சாலை அமைத்தல் மற்றும் தெருவிளக்கு அமைத்தல் முதலிய வசதிகள் செய்தல்,

செங்கல்பட்டு மாவட்டத்தில் மேம்பாட்டுத் திட்டதின்கீழ் 36345 குடும்பங்கள் 46281 லட்சம் செலவில் பயன்பெறுமாறு திட்டமிடப்பட்டு வேலைகள் முன்னேற்றத்தில் உள்ளன அதன் விவரங்கள் வருமாறு:-

| வ. எண் | நகரத்தின் பெயர் | குடும்பங்களின் எண்ணிக்கை | திட்ட மதிப்பீடு ரூ. (லட்சத்தில்) |
|---|---|---|---|
| 1. | செங்கல்பட்டு | 260 | 3 000 |
| 2. | ஆலந்தூர் | 896 | 8 720 |
| 3 | சுத்திவாக்கம் | 1914 | 20,230 |
| 4. | அம்பத்தூர் | 7499 | 103 920 |
| 5. | காஞ்சிபுரம் | 2500 | 21 610 |
| 6. | மாதவரம் | 1640 | 23,400 |
| 7. | ஆவடி | 6075 | 82 260 |
| 8 | பல்லாவரம் | 1975 | 18 530 |
| 9 | திருவொற்றியூர் | 5168 | 70,780 |
| 10. | திருவள்ளூர் | 1900 | 21.900 |
| 11. | தாம்பரம் | 6588 | 88 460 |
| | மொத்தம் | 36345 | 462 810 |



குடும்பம் ஒன்றிற்கு தலா ரூபாய் 1500 வீதம் செலவில் ஓலைகளால் அமைத்த கூரையை அகற்றி ஓடுகள் போடுதல் மண் சுவரை அகற்றிக் கல்சுவர் அமைத்தல் போன்ற வேலைகள் உடனடியாக செய்யப்பட உள்ளன இதற்கான செலவை அரசு வாரியத்திற்கு மான்யமாக தந்துள்ளது.

குடிசைகளில் அன்றாடம் நிகழும் தீவிபத்தை தடுக்க அரசு குடிசைவாழ்வோருக்கு இதற்காகும் செலவை இலவசமாக அளிக்க உத்திரவு பிறப்பித்துள்ளது ஓலைகளை அகற்றி ஓடுகள் போடும் திட்டத்தின்கீழ் 24703 குடும்பங்கள் 370 540 லட்சம் செலவில் பயன்பெறுமாறு திட்டமிடப்பட்டு வேலைகள் முன்னேற்றத்தில் உள்ளன, அவற்றின் விவரம் வருமாறு,

| வ எண். | நகரத்தின் பெயர் | குடும்பங்களின் எண்ணிக்கை | திட்ட மதிப்பீடு (ரு லட்சத்தில) |
|---|---|---|---|
| 1. | ஆலந்தூர் | 1794 | 26,910 |
| 2. | சுத்திவாக்கம் | 1505 | 22 575 |
| 3. | அம்பத்தூர் | 2380 | 35.700 |
| 4 | மாதவரம் | 759 | 11 385 |
| 5. | ஆவடி | 5055 | 75 825 |
| 6. | பல்லாவரம் | 1642 | 24 630 |
| 7. | திருவொற்றியூர் | 5773 | 86 595 |
| 8 | திருவள்ளூர் | 685 | 10,275 |
| 9 | தாம்பரம | 5110 | 76.650 |
| | மொத்தம் | 24703 | 370 540 |

குடிசை வாழ்வோருக்குத் தங்கள் வீடுகளைப் புதுப்பித்துக் கொள்ள ஹட்கோ கடனுதவியுடன் ஒரு குடும்பத்திற்கு ரூபாய் 3000- வீதம் கடன் வழங்கும் திட்டம் கீழ்கண்ட குடிசைப்பகுதிகளில் செயல்படுத்தப்படவுள்ளது இத்திட்டத்திற்கு ஹட்கோவின் ஒப்புதல் பெறப்பட்டுள்ளது ஹட்கோவின் கடனுதவி பெற்றவுடன் வேலைகள் துவக்கப்படும் இத்திட்டத்தின் கீழ் 13631 குடும்பங்கள் 408 93 இலட்சம் செலவில் பயன்பெற உள்ளனா

| வ எண் | நகரத்தின் பெயர் | குடும்பங்களின் எண்ணிக்கை | திட்ட மதிப்பீடு (ரு, லட்சத்தில்) |
|---|---|---|---|
| 1, | ஆலந்தூர் | 463 | 13.89 |
| 2. | அம்பத்தூர் | 6056 | 181 68 |
| 3 | ஆவடி | 1900 | 57.00 |
| 4. | காஞ்சிபுரம் | 445 | 13.35 |
| 5. | மாதவரம் | 800 | 24.00 |
| 6. | பல்லாவரம் | 474 | 14 22 |
| 7. | தாம்பரம் | 1025 | 30.75 |
| 8. | திருவொற்றியூர் | 1568 | 47.04 |
| 9. | திருவள்ளூர் | 900 | 27.00 |
| | மொத்தம் | 13631 | 408,93 |

இதயதெய்வம் புரட்சித்தலைவர் அவர்களின் எண்ணங்கள் எப்போதும் ஏழைகளைப்பற்றியே என்பதை மேலும் மேலும் நிரூபிக்கும் திட்டங்களில் குடிசை மாற்றுவாரியம் முன்நிற்கும் என்பது தெளிவாகிறது



## பத்தாண்டு காலத்தில் முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு...

★ அரசு ஊழியர்கள் வீடு கட்ட பெறப்படும் முன் பணம் ரூபாய் 150 000 வரையில் பெற உயர்த்தப்பட்டது

★ அரசுப்பணியில் சேரும் வயது வரம்பினை 28 ஆக உயர்த்தப்பட்டது

★ அரசு ஊழியர்கள் ஓய்வு பெறும வயது 55லிருந்து 58 ஆக உயர்த்தப்பட்டது.

★ அரசு ஊழியர் பணிக் காலத்தில் இறந்து விட்டால், ரூபாய் 20,000 வழங்கப்படுகிறது.

★ அரசு ஊழியர்கள் ஓய்வுபெறும் போது குறைந்தபட்சம் ரூபாய 5,000 முதல் அதிகபட்சமாக ரூபாய் 45 000 வரை பெறும் வகையில் ஊழியர் நலத்திட்டம் கொண்டு வரப்பட்டது.

★ நான்காண்டுகளுக்கு ஒருமுறை இரு வழிப் பயணச் சலுகையில் செல்ல அனுமதிக்கப்பட்டது.

★ ஈட்டிய விடுப்பில்செல்லாமல் இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை 30 தினங்கள் துறந்து பணமாகப் பெற அனுமதிக்கப்பட்டது

★ 31 12 77 வரையில் வேலை வாய்ப்பகத்தின் மூலமாக நியமனம் செய்யப்படாத பல்லாயிரக் கணக்கான பணியாளர்களின் பணி வரன் முறை செய்யப்பட்டது

★ சட்டங்களுக்கும் விதிகளுக்கும் அப்பாற்பட்டு, தற்காலிகமாக பணிபுரிந்து வந்த 12.000 பேர்களை தேர்வாணைக் கழகத் தேர்வுக்கு செல்லாமல் பணியினை 25-6-84ல் நிரந்தரம் செய்து ஆணை பிறப்பிக்கப்பட்டது.







# தவிக்கின்ற மக்களுக்கு தரமான குடி தண்ணீர்!

**எஸ். டி. உக்கம்சந்த் பி .எஸ்ஸி,**
தலைவர், தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்

"வான்நோக்கி வாழும் உயிரெல்லாம்... "...நீரின்றி அமையாது உலகு"

"புறந்தூய்மை நீரான் அமையும்... என்றெல்லாம் வள்ளுவப் பெருந்தகை நீரின் தன்மையை பலவாறு உணர்த்தியிருக்கிறார்!

நீரில் அதிலும் குடிநீரின் அவசியத்தை உணர்ந்த தமிழக முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு மக்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீரை வழங்கிட பல்வேறு ஏற்பாடுகள் செய்து வருகிறது.

கடந்த காலத்தில் இருந்த ஆட்சியாளர்கள் குடிநீருக்கு முக்கியத்துவம் கொடுத்து திட்டங்களை நிறைவேற்றி இருந்தால் இந்த அரசு பல்வேறு மக்கள் நலத் திட்டங்களை மேலும் மேலும் நிறைவேற்றி இருக்க முடியும்.

கடந்த 10 ஆண்டு காலத்தில் செங்கற்பட்டு மாவட்டத்தில் ஆலந்தூர், பல்லாவரம் ஆகிய நகரங்களில் மட்டும் தலா நாலரை கோடி ரூபாய் மதிப்புள்ள குடிநீர் திட்டங்களை கழக அரசு நிறைவேற்றியுள்ளது. மக்கள் குடிநீர் தட்டுப்பாடு இன்றி மகிழ்வோடு இருக்கிறார்கள்.

தாம்பரம், திருவொற்றியூர் காஞ்சிபுரம் மதுராந்தகம், செங்கற்பட்டு திருவள்ளூர் ஆகிய நகராட்சிகளிலும் குடிநீர் திட்டம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

ஆவடி, அம்பத்தூர், சிட்லபாக்கம், பம்மல், அனகாபுத்தூர், வாலாஜாபாத், குன்றத்தூர், கருங்குழி பூந்தமல்லி புழல் நந்தம்பாக்கம் ஊத்துக்கோட்டை திருத்தணி உத்திரமேரூர் திருக்கழுக்குன்றம் ஆரணி மறைமலைநகர் மாங்காடு (பாதிரிமேடு ஆகிய பகுதிகளில் உள்ள 10 லட்சம் மக்கள் பாதுகாக்கப்பட்ட குடிநீரை பெற்று வருகிறார்கள்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் 4918 குடியிருப்புகள் உள்ளன அவற்றில் 2761 குடியிருப்புகளில் உள்ள 11 லட்சத்து 89 ஆயிரம் மக்கள் பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீரை பெற்றிருக்கிறார்கள்.

இவற்றுக்காக 20 கோடியே 26 லட்சத்து 43 ஆயிரம் ரூபாய் செலவில் 1368 கைபம்புகளும் 1382 மின் விசை பம்புகளும் போடப்பட்டுள்ளன.

இந்த ஆண்டில் 779 குடியிருப்புகளுக்கு 7 கோடியே 65 லட்சம் ரூபாய் செலவில் 5 லட்சத்து 6 ஆயிரம் பேர்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

காஞ்சிபுரம் நகராட்சியில் ரூபாய் 250 லட்சத்திலும் தாம்பரத்திற்கு ரூபாய் 395 லட்சத்திலும் மேம்பாட்டு திட்டம் செயலாக்கம் ஆய்வில் உள்ளன.

திருக்கழுக்குன்றத்திற்கு ரூபாய் 35 லட்சத்திலும் திருத்தணிக்கு ரூபாய் 50 லட்சத்திலும் மறைமலை நகருக்கு ரூபாய் 30 லட்சத்து 80 ஆயிரத்திலும் மேம்பாடு திட்டம் ஆய்வு செய்யப்பட்டு வருகிறது.

திருமழிசை வளசரவாக்கம் மாங்காடு, பேரூர் அச்சரப்பாக்கம் நாரவாரிகுப்பம் திருநின்றவூர், திருவேற்காடு மணலி சின்னசேக்காடு சோளிங்கநல்லூர், மேடவாக்கம் ஆகிய பேரூராட்சிகளில் சராசரி தலா 50 லட்சம் ரூபாயிலான குடிநீர் திட்டங்களை நிறைவேற்றும் பணிகள் ஆய்வு செய்யப்படுகின்றன.

குடிநீரை தந்தால் மட்டும் போதாது அந்த மக்கள் பயன்படுத்தும் நீரையும் கழிவு நீரை வெளியேற்றும் திட்டமும் செயல்படுத்தும் பணியை குடிநீர் வடிகால் வாரியம் செய்து வருகிறது.

திருவொற்றியூர் நகராட்சியில் 136 லட்சம் ரூபாயிலும் காஞ்சிபுரத்தில் 204 லட்சத்து 92 ஆயிரம் ரூபாயிலும் மறைமலை நகருக்கு 37 லட்சத்து 18 ஆயிரம் ரூபாய் செலவிலும் கழிவு நீர் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டுள்ளன.

உலக மக்களை கவரும் சுற்றுலாதலமான மாமல்லபுரத்தில் ரூபாய் 60 லட்சம் செலவில் கழிவு நீரை அகற்றும் திட்டம் ஆய்வு செய்யப்பட்டு வருகிறது.

முதல்வர் புரட்சித் தலைவரின் யோசனைப்படி உருவாக்கப்பட்டுள்ள புழலில் உள்ள சிறந்த வெளி மத்திய சிறைச் சாலையில் ரூபாய் 40 லட்சம் செலவில் கழிவு நீரகற்றும் திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

சென்னையில் தாம்பரம் அருகே அமைக்கப்பட்டுள்ள வரியற்ற வர்த்தக மண்டலப் பகுதியில் 157 லட்சம் ரூபாய் செலவில் வடிகால் பணிகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

காலங்கள் தோறும் மழை பொய்க்காது பெய்தால் எங்கள் பணி எளிமையானது ஆனால் கடும் கோடையும் வறட்சியும் வரும்போது எதனையும் தாங்கிடும் சக்தியுடன் சாதனை படைத்திட புரட்சித்தலைவர் வழி காட்டி வருகிறார்,

இதயதெய்வம் தமிழக முதல்வர் புரட்சித் தலைவரின் வழிகாட்டுதலின் படி வறட்சி நிவாரணப் பணி திட்டங்கள் மூலம் 2165 குடியிருப்புகளில் உள்ள 6 லட்சத்து 49 ஆயிரத்து 500 மக்களுக்கு 4 கோடியே 7 லட்சத்து 2 ஆயிரம் ரூபாய் செலவில் திட்டங்களை நிறைவேற்றி குடிநீரை தந்து வருகிறோம்.

இன்னும் எந்தந்த பகுதியில் உள்ள மக்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் இல்லை என்பதை குடிநீர் வடிகால் வாரியம் கணக்கிட்டு வருகிறது!

அங்கு கிடைக்கிற நீரின் தன்மையை பரிசோதித்து அந்த மக்களுக்கு வேண்டிய குடி தண்ணீரை தருவதற்கு இதய தெய்வம் முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டிருக்கிறார்.

நல்ல நீரின்றி தவிக்கிற மக்களுக்கு நல்ல குடி தண்ணீர் வழங்கிடுவோம் என்பதே எங்கள் குறிக்கோள்.

## பத்தாண்டு காலத்தில் முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு...

★ பணிக்காலத்தில் இறந்துவிடும் அரசு ஊழியர் அரசுக்கு செலுத்த வேண்டிய கடன்கள் இருந்தால், அவற்றை தள்ளுபடி செய்ய உத்தரவிடப்பட்டுள்ளது.

★ ஊராட்சி ஒன்றியம், நகராட்சிகளில் பணி புரியும் ஆசிரியர்கள் அரசு ஊழியர்களாக்கப்பட்டுள்ளனர்.

★ தமிழக அரசில் பணி புரியும் அனைத்து பணியாளர்களுக்கும் ஒரே சமமாக பொங்கல் பரிசாக ரூபாய் 300 வழங்கப்பட்டது.

★ அரசு ஊழியர்களுக்கு இறப்பு ஓய்வூதிய பணிக்கொடை ரூபாய் 36,000லிருந்து ரூபாய் 50,000 ஆக உயர்த்தப் பட்டுள்ளது

★ குடும்ப ஓய்வூதியமாக குறைந்தபட்சம் ரூபாய் 230 அதிகபட்சம் ரூபாய் 800 இறந்த அரசு ஊழியரின் குடும்பத்திற்கு வழங்கப்படுகிறது.

# செங்கை மாவட்டத்தில் வளர்ச்சி பணிகள்

**டாக்டர் பி. பாண்டியன், இ.ஆ.ப.**
மாவட்ட ஆட்சித் தலைவா, செங்கை மாவட்டம்

மாநில மற்றும் மைய அரசுகளின் பல்வேறு தொழில் வளர்ச்சி நடவடிக்கைகளை நிறைவேற்றுவதில் தொழில் வணிகஇயக்கத்தின் கீழ் செயல்படும் மாவட்ட தொழில் மையங்கள் முக்கிய பங்கினை வகிக்கின்றன. செங்கற்பட்டு மாவட்டத்தில் காஞ்சிபுரத்தில் உள்ள மாவட்ட தொழில் மையம் இம்மாவட்டத்தில் பல்வேறு தொழில் வளர்ச்சித் திட்டங்களை நிறைவேற்றுவதில் ஒரு உன்னத அமைப்பாக விளங்குகிறது

செங்கை மாவட்ட தொழில் மையம், ஆர்வமுள்ள தொழில் முனைவோர்களை ஊக்குவிக்கும் நோக்கத்துடன், தொழில் வளர்ச்சி பெறுவதற்குரிய வாய்ப்புகளை மக்களுக்கு விளக்கி வருகிறது மேலும் தொழில் முனைவோர்களுக்கு திட்ட அறிக்கைகள் தயாரிப்பது பற்றிய ஆலோசனையும் வழங்கி வருகிறது. தொழில் முனைவோர்கள் தயாரிப்பு பொருளை தேர்ந்தெடுப்பது முதல் அதை வெற்றிகரமாக உற்பத்தி செய்து முடிப்பது வரை இம் மாவட்ட தொழில் மையம் உதவியளித்து வருகிறது.

## தொழிற்பேட்டைகள்

31.3.87 வரை செங்கை மாவட்டத்தில் நிரந்தரப் பதிவுச் சான்றிதழ் பெற்று இயங்கி வரும் சிறுதொழில் நிறுவனங்களின் எண்ணிக்கை 7696 ஆக உயர்ந்துள்ளது தற்காலிகச் சான்றிதழ் பெற்ற சிறுதொழில் நிறுவனங்களின் எண்ணிக்கை 3,303 ஆகும் சிறு தொழில் வளர்ச்சியினை ஊக்குவிக்கும் பணியாக இம்மாவட்டத்தில் மாதவரம் அம்பத்தூர், கொடுங்கையூர், வில்லிவாக்கம், ஈக்காடுதாங்கல் பெருங்குடி, காக்களூர் மறைமலை நகர் ஆலந்தூர், ஒரிகை கும்மிடிப்பூண்டி ஆகிய இடங்களில் தொழிற்பேட்டைகள் அமைக்கப் பட்டுள்ளது இது தவிர திருப்பெரும்புதூர் மற்றும் மதுராந்தகம் அருகில் தொழிற்பேட்டைகள் அமைக்கும் பணி பரிசீலனையில் உள்ளது வெளிநாட்டு ஏற்றுமதிப்பொருட்கள் உற்பத்திக்கென தனித் தொழிற்பேட்டை ஒன்று தாம்பரம் அருகே செயல் பட்டு வருகிறது

## தொழில் திட்டப் பணிகள்

1986 87, 87—88 88—89 ஆகிய மூன்று ஆண்டுகட்கு, செங்கை மாவட்டத்தில், சிறு தொழில்களின் தீவிர வளர்ச்சிக்காக செயல் திட்டம் ஒன்று தீட்டப்பட்டுள்ளது 86 87ல் புதிய சிறு தொழில்களை ஆரம்பிக்க நிர்ணயிக்கப்பட்ட இலக்கு 850 ஆகும் இந்த இலக்கினைத்தாண்டி 1,112 புதிய சிறிய தொழில்கள் துவக்கப்பட்டு நிரந்தரப் பதிவுச் சான்றிதழ்கள் வழங்கி 139 சதவிகிதம் குறியீடு எட்டி அரிய சாதனை புரிந்துள்ளது சுமார் 11 ஆயிரம் நபர்கள் வேலை வாய்ப்பினை பெற்றுள்ளனர் இந்தச் சாதனை வேறு எந்த மாவட்டத்திலும் சாதிக்காத புதிய சாதனை ஆகும் வேறு எந்த ஆண்டிலும் சாதித்ததை விட சிறந்த சாதனை ஆகும்

சிறு தொழில்களின் வளர்ச்சியினைச் சீராக்கிட தேவையான மூலப் பொருட்களை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்திட இம் மாவட்ட தொழில் மையம் ரூபாய் 4.2 கோடி அளவுக்கு '86 87ல் பரிந்துரை செய்துள்ளது உள் நாட்டில் கிடைக்கும் சில அரிதான மூலப் பொருட்களையும் கட்டுப்பாட்டு விலையில் பெற்றிட 86 87ல் 177 மனுக்கள் பரிந்துரை செய்துள்ளது தேசிய சிறு தொழில் வளர்ச்சி நிறுவனம் மூலம் தவணை முறையில் இயந்திரங்கள் தளவாடங்களைப் பெற்றிட ரூபாய் 1.32 கோடிக்கு 60 மனுக்களைப் பரிசீலித்து அனுப்பியுள்ளது தமிழ்நாடு தொழில் முதலீட்டுக்கழகம் மூலம் ரூபாய் 6.87 கோடிக்கு 296 நிறுவனங்களுக்கு கடனுதவி வழங்கப்பட்டுள்ளது இது தவிர தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் மூலம் கடன் வழங்கிட 207 நிறுவனங்களுக்கு ரூபாய் 50.97 இலட்சங்கள் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது

கிராமங்களில் துவக்கப்படும் சிறு தொழில்களுக்கு விளிம்புத் தொகை கடன் உதவி அளிக்கப்படுகிறது 86 87ல் 18 நிறுவனங்களுக்கு ரூபாய் 4.10 லட்சத்து அனுமதி வழங்கப்பட்டுள்ளது நலிவுற்ற சிறு தொழில்களை ஊக்குவித்து அவற்றிற்குப் புத்துயிர் ஊட்ட நலிவுற்ற சிறுதொழில்களின் மனுக்கள் பரிந்துரை செய்யப் படுகிறது.

பாரதப் பிரதமரின் 'படித்த வேலை வாய்ப்பற்ற இளைஞர்கள்வேலை

Vம் பக்கம் பார்க்க

## செங்கை மாவட்ட வளர்ச்சி பணிகள்...

11ம் பக்கத் தொடர்ச்சி

வாய்ப்புத்திட்டத்தின் கீழ் இம்மாவட்டத் தொழில் மையம் மொத்தம் ரூபாய் 39.60 லட்சம் அளவுக்கு 2141 இளைஞர்களுக்கு சுய வேலை வாய்ப்புத் தொழில் துவங்கிட வங்கிகளின் மூலம் கடன் உதவி பெறத் தேவையான அனுமதி பெற்று நல்கியுள்ளது. தமிழ்நாடு முழுவதிலுமுள்ள மாவட்டத் தொழில் மையங்கள் கடன் உதவி வழங்கியதோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது இத் தொகை தான் அதிகமாகும். இதில் 60 சதவிகிதம் புதிய தொழில்கள் துவங்கிட அளிக்கப்பட்டதாகும்.

இது தவிர சிறு தொழில்களை நவீனப்படுத்தவும் தரமான பொருட்களை தயாரித்திட தரக்கட்டுப்பாடுகளை செயல்படுத்தவும் அம்பத்தூர் பகுதியில் உள்ள தொழில்களுக்கென அம்பத்தூர் தொழிற்பேட்டையில் ஒரு கருத்தரங்கும், செங்கற்பட்டு மாவட்டம் முழுவதற்குமென கிண்டி தொழிற்பேட்டையில் ஒரு கருத்தரங்கும் நடத்தி உள்ளது.

1986 87ம் ஆண்டில் இம்மாவட்ட தொழில் மையம் மேற்கொண்ட பல முக்கிய பணிகளில் இதுவும் ஒன்றாகும். மேலும் சிறு தொழில் நிறுவனங்களுக்கு மின் இணைப்பு பெறுவதில் தாமதம், மற்றும் ஊராட்சி மன்றங்கள், ஒன்றியங்கள், நகராட்சி அலுவலகங்களிலிருந்து வழங்கப்படும் தொழில் துவங்க உரிமங்கள் பெறுவதில் சிரமங்கள் இருந்தால் அவற்றினை ஒவ்வொரு மாதமும் கடைசி வாரத்தில் சென்னை சைதாப்பேட்டை பனகல் கட்டிடத்தில் கூட்டப்பெறும் கோட்டப் பொறியாளர்கள் மற்றும் சிறு தொழில் அதிபர்கள் கொண்ட கூட்டத்தில் விவாதிக்கப்பட்டு துரித நடவடிக்கைகள் எடுக்கப்படுகிறது. நிதி நிறுவனங்களிடமிருந்து கடனுதவி பெறுவதில் உள்ள சிரமங்களும் நிவர்த்திக்கப்படுகிறது.

### மான்யங்கள்

கும்மிடிப்பூண்டி பொன்னேரி மற்றும் மதுராந்தகம் வட்டங்கள் தொழிலில் பின் தங்கிய பகுதிகளென அறிவிக்கப்பட்டதைத் தொடர்ந்து இப்பகுதிகளில் புதியதாக தொழில் தொடங்கும் நிறுவனங்களுக்கு அவற்றின் நிலையான முதலீட்டில் 15 சதவீதம் மான்யத்தொகை சலுகை உள்ளது. இது தவிர சென்னை பெருநகர் பகுதிக்கு அப்பால் குறிப்பிட்ட பகுதிகளில் தொடங்கும் புதிய தொழில்களுக்கு மின் மான்யம் மற்றும் வட்டியில்லா விற்பனை வரி கடன் வசதி போன்ற சலுகைகளும் உள்ளது. 86 87ம் ஆண்டில் 11 சிறு தொழில் நிறுவனங்களுக்கு வட்டியில்லா விற்பனை வரி கடன் தொகையாக ரூபாய் 15 லட்சங்கள் அனுமதி வழங்கப்பட்டுள்ளது. 5 சிறு தொழில் நிறுவனங்களுக்கு மின் மானியத் தகுதிச் சான்றிதழ்கள் வழங்கியுள்ளது.

இது தவிர பொறியியல் பட்டதாரிகள் தொடங்கும் நிறுவனங்களுக்கு வட்டித்தொகை மானியம் வழங்கப்படுகிறது. 86 87ல் 4 நிறுவனங்களுக்கு ரூபாய் 70,000க்கு அனுமதி வழங்கியுள்ளது. இந்தியத் தரக்கட்டுப்பாடு நிறுவன சான்றிதழ் பெற்றிட மான்யத்தொகை வழங்கப்படுகிறது.

86 87ல் 9 நிறுவனங்கட்கு ரூபாய் 26,600 அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

எதிர்காலத்தில் செங்கல்பட்டு மாவட்டம் சிறு தொழில் வளர்ச்சியில் உன்னத நிலையை அடையும் என்பதில் எவ்வித ஐயப்பாடுமில்லை.

★ வருவாய் ஆய்வாளர்கள் கிராமங்களில் தங்கிப்பணியாற்ற அவர்களுக்கு குடியிருப்பு வசதிகள் ஏற்படுத்தப்பட்டது.

★ புதியதாக கிராம நிர்வாக அலுவலர்கள் பதவி உருவாக்கப்பட்டு சேவைப்பணிகள் உருவாக்கித் தரப்பட்டன.

# பாலாற்றங்கரை ஓரம் பால் ஊறும் திட்டம்!

**தி. கரா. நடராசன்**

தலைவர், சென்னை செங்கைமாவட்ட பால் உற்பத்தியாளர் ஒன்றியம்

தமிழக முதல்வர் இதயதெய்வம் புரட்சித் தலைவர் ஆட்சியில் எல்லா துறைகளும் எழிலார் துறைகளாக புதுப்பொலிவு பெற்று விளங்குகிறது.

வெண்மை புரட்சி திட்டத்தின் கீழ் நாடெங்கும் பால்பெருக்கு திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

நூல் பாவு கொண்டு நெசவு செய்யும் தொழிலாளர்கள் நிறைந்த செங்கற்பட்டு மாவட்டத்தில் பால் உற்பத்தி பெருக்கிடும் சிறப்புமிகு திட்டங்கள் விரைவுபடுத்தப்பட்டு வருகின்றன.

எதிலும் முன்னணிலையில் நிற்கும் செங்கற்பட்டு மாவட்டம் பால் உற்பத்தியிலும் முன்னணிக்கு வந்து கொண்டிருக்கிறது.

பாலாறு செங்கை மாவட்டத்தில் மணலாக ஓடினாலும் அக்கரை மயங்கும் பால் ஊறும் வகையில் விவசாயிகள் மாடுவளர்ப்பதில் அக்கறையோடு செயல்படுகிறார்கள்.

இந்த பால் உற்பத்தியாளர் ஒன்றியம் வைர விழா கண்டுகொண்டிருக்கிறது.

### தரமான பால்

சென்னை மாநகரில் உள்ள மக்களுக்கு நல்ல தரமான பால் நியாயமான விலையில் கிடைக்கவும் வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ளவர்கள் ஒரு நிரந்தரமான வருவாயை அடைவதற்கும் பால்கூட்டுறவு சங்கங்களை ஆரம்பித்து அதன்மூலம் பயன் அடையவும், சென்னை கூட்டுறவு பால்வழங்கும் ஒன்றியம் காலஞ்சென்ற திவான்பகதூர் சே. தெய்வசிகாமணி முதலியார் அவர்களால் 1927ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது.

ஆரம்பத்தில் 14 பால் கூட்டுறவு சங்கங்களுடன் ரூபாய் 242 பங்கு மூலதனத்துடனும் ஆரம்பிக்கப்பட்ட இவ்வொன்றியம் தற்சமயம் சென்னை செங்கை மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர்கள் ஒன்றியமாக மாற்றப்பட்டு சுமார் 580 சங்கங்கள் (பிரதம அமைப்பாளர்கள் உட்பட) பால் வழங்க இயங்கிக் கொண்டு வருகிறது. இவ்வொன்றியத்தின் பணி செங்கற்பட்டு விவசாய எல்லைக்குட்பட்டதாகும்.

வடாற்காடு மாவட்டத்தில் உள்ள விவசாய குடி மக்களுக்கு நிரந்தர வருவாய் மற்றும் வேலை வாய்ப்பு கிடைக்க ஏறக்குறைய 130 சங்கங்களில் இருந்தும் ஒன்றியம் பால் சேகரம் செய்து கொண்டு வருகிறது.

### தீவிரத் திட்டம்

தீவிர பால் பெருக்குத் திட்டத்தின் கீழ் தேசிய பால்வள வாரியம் இந்திய பால் பண்ணைக் கழகம் ஆகியவற்றின் நிதி உதவியுடன் பல அபிவிருத்திப் பணிகள் முடிவு பெற்றுள்ளது. இன்னும் சில அபிவிருத்தி பணிகளை மூன்றாவது பால் பெருக்கு திட்டத்தின் கீழ் இந்தியப் பால் பண்ணைக் கழகத்தின் உதவியைக் கொண்டு செய்யவுள்ளது.

இரண்டாவது பால் பெருக்குத் திட்டத்தின்கீழ் இந்தியப்பால் பண்ணைக் கழகத்தின் நிதி உதவியைக் கொண்டு திருவள்ளூரை அடுத்த காக்களூர் கிராமத்தில் புதிய பால் குளிரூட்டும் நிலையத்தை அமைத்து சுற்றுப்புற கிராமத்தில் புதிய சங்கங்களை ஏற்படுத்தி தற்சமயம் பால் சேகரம் செய்து கொண்டிருப்பதோடு செங்கை மாவட்டத்தைச் சார்ந்த திருவள்ளூர் பூவிருந்தவல்லி, திருமழிசை திருவேற்காடு திருத்தணி பட்டாபிராம் வளசரவாக்கம் போரூர் ஆகிய இடங்களில் ஒன்றியத்தின் மூலம் முகவர்களை நியமித்து அவர்கள் வழியாக சுத்தமான பால் குறித்த நேரத்தில் விநியோகம் செய்து கொண்டு வருகிறோம்.

1927ல் ஆரம்பிக்கப்பட்ட இவ்வொன்றியம் தற்சமயம் 'வைர விழா' ஆண்டாகக்கொண்டாட இருப்பதோடு அவ்வைர விழா ஆண்டை முன்னிட்டு ஒன்றியம் தான் பெற்ற இலாபத்தில் பால் உற்பத்தியாளர்களின் வறுமையினை நீக்கி அவர்கள் வாழ்க்கைத் தரத்தை முன்னேற்றம் அடையச்செய்ய ஒரு பகுதியை தனது உறுப்பினர்கள் சங்கங்களுக்கு அவை ஒன்றியத்திற்கு வழங்கிய பாலின் அளவை அடிப்படையாகக்கொண்டு பிளோயிங்பேக்ரீட்டர்ன்ஸ் திட்டப்படி கணக்கிட்டு கூடுதல் விலையாக வழங்க வழிவகை செய்துள்ளது.

பொன்மனச் செம்மல் இதயதெய்வம் புரட்சித் தலைவர் அவர்களது ஆட்சியில் 87-88 89-90வது ஆண்டுகளில் தற்சமயம் 6,000 லிட்டர் பாலை பிலிதீன் பைகளில் ஒன்றியம் விற்று வரும் தரமான பாலின் அளவை 20,000 லிட்டர் பால் வரை பாலிதீன் பைகளில் அடைத்து பொது மக்களுக்கு விநியோகம் செய்யும் திட்டத்தினை ஒன்றியம் வகுத்துள்ளது மட்டுமின்றி தடை முறையில் செயல்படுத்த துரித நடவடிக்கைகளை ஒன்றியத் தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர் குழு மேற்கொண்டு வருகிறது.

### பத்தாண்டு காலத்தில் முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு...

★ முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தினை தமிழகத்தில் அமல்படுத்தியதால் படித்துவிட்டு வேலையின்றி தவித்தவர்கள், கணவனை இழந்த இளம் விதவைகள், ஆதரவற்றவர்கள், தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினை ஆகியோர் உள்பட சுமார் 1,50,000 பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டன. இதனால் சமூக நலத்துறை கல்வித்துறை உள்ளாட்சித்துறைகளில் பலபுதிய பதவிகள் உருவாக்கப்பட்டன.

# திராவிட இயக்கத் தொட்டில்கள்!

**என். வி. என். செல்வம் பி. ஏ.**

செங்கை மாவட்டத்தின் இதயமாக எல்லோருக்கும் விளங்குகின்ற திருத்தலம் காஞ்சி மாநகரம் திராவிட இயக்கத்தின் மற்றொரு தொட்டிலான காஞ்சியில் பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்கள் பிறந்து வளர்ந்து வாழ்ந்தார்! என் இன்னும் நம்மோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

பேரறிஞர் அண்ணாவின் மாற்றாக இதயதெய்வம் புரட்சித்தலைவர் விளங்குகிறார்.

பரங்கிமலை வள்ளலாக வாழ்ந்து வழிகாட்டி வாழ்வித்து வரும் இதயதெய்வம் புரட்சித் தலைவர் வாழும் மாவட்டமும் செங்கைதான்! என் அன்புத்தந்தை என் என். பேரறிஞரோடும் புரட்சித் தலைவரோடும் பழகிய நாட்கள் நெஞ்சங்களில் நிழலாடுகிறது' விழிமலரில் நீரோடும் அண்ணா புரட்சித் தலைவருடைய பாசத்தை நினைத்து நினைத்து மகிழும் போது தந்தையே உங்கள் நினைவுகள் அதைவிட நீங்கள் பெரிதாக நம்பிய பெரிய மனிதர்கள் எங்களுக்கு இழைத்த கொடுமைகள் மீளாதுயரைத்தான் தருகிறது!

'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' என்று துணிந்த பாசமிகு அண்ணன் புரட்சித் தலைவரை நோக்கி சேய்கன்று போல ஓடிவந்த போது அன்புடன் அரவணைத்த பாசக்கரங்கள் மயிலிறகின் மென்மை.

தந்தையே! தாங்கள் வாழ்ந்த காலத்தில் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா திராவிட பாரம்பரியம் தமிழ் இன உணர்வுகள் இவைகளுக்கு தாங்கள் காட்டிய ஆர்வம் உழைப்பு அரசியல் வாழ்க்கையும் கட்சிக்குப் பின்தான் குடும்பம் என்று ஆற்றிய பணிகளும் என்றும் மறக்க இயலாது.

பெற்ற குழந்தைகளாகிய எங்களுக்கு சிறப்புகள் செய்யவில்லை தவிர தாங்கள் நடத்திய ஏடாவது குழந்தையான திராவிடனை முதல் குழந்தையாக எண்ணி எத்தனை கஷ்டங்களும் தொல்லைகளும் வேதனைகளும் வந்தாலும் இடைவிடாது கொள்கைப் பிடிப்போடு நடத்தி வந்தீர்கள்.

தாங்கள் வீட்டின் சூழ்நிலையை எண்ணி எண்ணி அதற்கு மாற்று மருந்து உள்ளது என்று நம்பினீர்கள் ஆனால் அது மருந்து அல்ல மாயை என்று நீங்கள் மறைந்த 16 நாட்களுக்குள் தெரிந்து கொண்டோம்.

தாங்கள் இயக்கம் இயக்கம் என்று உழைத்தீர்கள் எந்த நேரமும் கழகம் அண்ணா கடமை என்று அயராது உழைத்தீர்கள் 1972ல் அண்ணா வளர்த்த திராவிட பாரம்பரியம் அழியக் கூடாது என தாங்கள் பெரும்முயற்சி எடுத்து கருணாநிதியிடம் புரட்சித்தலைவரை கழகத்தை விட்டு நீக்க வேண்டாம் என்று சொன்னீர்கள்' அதற்கு அவர் (கருணாநிதி) "நீயும் அவரோடு சேர்ந்து போ" என்று சொன்னது கேட்டு அன்று முழுவதும் தாங்கள் வீட்டில் பட்ட கஷ்டத்தை நாங்கள் அறிவோம்.

ஆரம்ப காலத்தில் அண்ணாவோடு சேர்ந்து இக்கத்தை ஆரம்பித்ததுபற்றி நினைக்தும், இன்றைய சூழ்நிலையையும் (1972ம் ஆண்டு) எண்ணி வருந்தினீர்கள்.

1975ம் ஆண்டு கழகத்துக்கு ஏற்பட்ட நெருக்கடி நேரத்தில் கூட்டங்கள் பேசமுடியாத நிலையில் அன்றைக்கு உங்கள் முதல் நினைவு நாள் கொள்கை முழக்கமாக கழகத்தை காப்பாற்ற பயன்பட்டது. செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்பது போன்று "மறைந்தும் கழகத்தை காப்பாற்றினீர்கள்" அடுத்த நினைவு நாள் நடத்த நானும் நாஞ்சில் மணிமாறனும் சென்று கருணாநிதியிடம் கேட்டபோது தேவை இல்லை என்று கூறினார். தந்தையே உங்களது முதல் நினைவு நாளில் மிசாவில் இருந்து பரோலில் வந்து கலந்து கொண்டேன்.

ஒரு தவறும் செய்யாத நிலையில் எனக்கு தண்டனை மாறிலும், முதுகிலும், முகத்திலும் அடிமேல் அடி நீங்கள் இல்லாத நிலையில் வீட்டில் அம்மா, தம்பிகள் தங்கைகள் எனது மனைவி குழந்தைகள் பட்ட அவல நிலை சொல்ல முடியாது.

திக்கற்ற நிலையில் நாங்கள் இருந்தபோது நமது குடும்பத்தை வாழவைத்த தெய்வமாக காக்கும் கரமாக கலங்கரை விளக்காக திகழ்ந்தார் இதய தெய்வம். புரட்சித்தலைவர்.

அமிழ்த்து வைக்கப்பட்டிருந்த நமது குடும்பத்தின் பாரம்பரியத்தையும் உங்கள் தியாகத்தையும் புகழையும் உலகுக்கு எடுத்துக்காட்டியவர் புரட்சித் தலைவர்.

தாங்கள் 40 ஆண்டுகளுக்கு மேல் உழைத்த உழைப்புக்கு எவ்வித முகாந்திரமும் இல்லாத நிலையில் உங்களது உழைப்பை பாராட்டி சென்னை அண்ணா நகருக்கு அடுத்த திருமங்கலத்தில் குடிசைமாற்று வாரிய குடியிருப்புகளை கட்டி அதற்கு என் வி நடராசன் நகர் என்று பெயர் வைத்து திறந்து வைத்தவர் புரட்சித்தலைவர்.

நமது குடும்பத்திற்கு மட்டுமல்ல, எண்ணற்ற இலட்சோபலட்சம் குடும்பங்களுக்கும், திராவிட பாரம்பரியத்தின் தியாகிகளுக்கும் கடல் கடந்து வாழ்கின்ற தமிழர்களுக்கும். அண்டை மாநிலத்தில் வாழும் தமிழர்களுக்கும் எண்ணற்ற சாதனைகளையும் உதவிகளையும் புரிந்து அண்ணாவின் இதயக்கனியாகவும் தமிழர்களின் இதயதெய்வமாகவும் திகழ்கின்றார் புரட்சித்தலைவர்.

அந்த இதயதெய்வம் இன்றைக்கு அமெரிக்க திருநாட்டில் இருந்தாலும் எண்ணமெல்லாம் இனிய தமிழ் மக்களை பற்றிதுயதான்.

பேரறிஞர் அண்ணாவின் இல்லத்திற்கு நீங்கள் சென்ற போதெல்லாம் அண்ணா அவர்கள் புரட்சித்தலைவரை பற்றிச்சொன்ன மதிப்பான வார்த்தைகளால் தான் நீங்கள் 'புரட்சித்தலைவர் மீது நடவடிக்கை எடுக்கக்கூடாது' என்றீர்கள்.

கேட்க மறுத்த ஜீவன்கள் இன்றைக்கு நாட்டில் ஜீவன் அற்றவர்களாக இருக்கிறார்கள்! செங்கை மாவட்டம் பேரறிஞர் அண்ணா அவர்களை உருவாக்கி தந்த மாவட்டம்! அது மட்டுமல்லகளை இன்றைய கழகத்திற்கு அணி வேராக இருந்ததே செங்கை மாவட்டம்தான்!

திருக்கழுக்குன்றத்தில் புரட்சித்தலைவர் நடத்திய புரட்சி தான் பொய்மையாளர்களை புறமுதுகிட வைத்தது!

ஆம்! திராவிட இயக்கத்தின் தொட்டில் செங்கை மாவட்டமே!

# தொழிலாளர் நலம் காக்கும் தலைவர்

கோ. வேல்முருகன் பொதுச்செயலாளர் அண்ணா தொழிற் சங்கப் பேரவை



பேரறிஞர் அண்ணாவின் பெயரைத் தாங்கி வெளிவரும் இதயதெய்வம் முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவரால் நிறுவப்பட்ட கழகத்தின் அதிகாரப்பூர்வமான நாளேடான "அண்ணா" நாளிதழ் செங்கை மாவட்ட மலரினை வெளியிடுகிறது.

இதில் செங்கை மாவட்டத்தில் தொழிற் சங்கத்தின் இன்றைய நிலைகளை பல்வேறு தொழிற்சங்கங்களின் தலைவர் என்றமுறையிலும் இதய தெய்வம் முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவரால் அண்ணா தொழிற்சங்கப் பேரவைக்கு பொதுச் செயலாளராக நியமித்ததின் அடிப்படையிலும் எனது எண்ணங்களையும் நான் பல்வேறு தொழிற்சங்கங்களில் பொறுப்பேற்றிருந்த காலத்தில் செய்த நன்மைகளையும் கோடிட்டு காட்டுவதில் பெருமையடைகிறேன்.

கடந்த 16 ஆண்டுகட்கு முன்பாக இதயதெய்வம் டாக்டர் புரட்சிதலைவரின் கருணையினால் டன்லப் தொழிற்சாலையில் சாதாரணத் தொழிலாளியாக பணியில் சேர்ந்தேன். 'உழைப்பவரே உயர்ந்தவர்' என்பது இதயதெய்வம் முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் தாரக மந்திரமாகும். அதன் அடிப்படையில் படிப்படியாக முன்னேறி கடந்த 1978-ம் ஆண்டு முதல் தொடர்ந்து ஆண்டுதோறும் நடைபெறும் சங்கத் தேர்தலில் ரகசிய வாக்கெடுப்பின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டு பொதுச் செயலாளராகப் பணியாற்றி வருகிறேன்.

பொதுச் செயலாளராக பணியாற்றத் தொடங்கிய நாள்முதல் இன்று வரை ஒரு மணி நேர மனித உழைப்பு கூட வேலை நிறுத்தம் ஏற்படவில்லை என்பதில் பெரு மகிழ்ச்சியடைகிறேன். ஒரு தொழிலுக்கு ஒரு தொழிற்சங்கம் என்ற கொள்கையின் அடிப்படையில் இயங்கி வரும் டன்லப் தொழிற்சங்கத்தில் எந்தவிதமான போராட்டமும் இன்றி பேச்சுவார்த்தையின் மூலமாகவே இரண்டு நீண்டகால ஒப்பந்தங்கள் போடப்பட்டது. தொழிலாளர்கள் குறித்த நேரத்தில் பணிக்கு வந்து திரும்பச் செல்வதற்கு சலுகைக் கட்டணத்தில் பேருந்து வசதி, கூட்டுறவு சிறப்பங்காடி வசதி, இறந்தோர் ஓய்வுற்றோர் நலநிதி திட்டம், கூட்டுறவு வீடு கட்டும் சங்கம் போன்ற பல்வேறு திட்டங்களைச் செம்மையே செயல்படுத்தி வருகிறோம்.

கடந்த 28-2-1987-ல் பணியில் இருக்கும் போது இறந்துவிட்ட தொழிலாளியின் குடும்பத்தினருக்குநிதி அளிப்பு விழாவில் கலந்து கொண்டு துவக்கி வைத்த போது இதயதெய்வம் மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவர் இத்திட்டத்தின் மூலம் ஒவ்வொரு தொழிலாளியும் தன்னுடன் பணியாற்றி இறந்து விட்ட தொழிலாளியின் குடும்பத்தினருக்காக மாதந்தோறும் ரூபாய் 10-ஐ சந்தாவாக செலுத்தி அதன்மூலம் இறந்த தொழிலாளி குடும்பத்தினருக்கு ரூபாய் 10 ஆயிரமாக வழங்கி வருவதை வெகுவாகப் பாராட்டினார்.

இத்திட்டத்தினை உருவாக்கி செயல்படுத்திட்ட என்னை செங்கை மாவட்ட அண்ணா தொழிலாளர் நலக்குழுச் செயலாளராக நியமனம் செய்தார். புரட்சித்தலைவரின் ஆசியோடு துவக்கிய இத்திட்டம் தற்போது படிப்படியாக முன்னேறி தற்போது இறந்த தொழிலாளியின் குடும்பத்திற்கு ரூபாய் 20 ஆயிரம் ஓய்வு பெற்ற தொழிலாளிக்கு ரூபாய் 20 ஆயிரம் வழங்கி வருவதோடு மட்டுமல்லாமல் நிதி உதவித் திட்டம் தொழிலாளர் குழந்தைகள் கல்வி மேம்பாட்டுத் திட்டத்தினை அறிமுகம் செய்து தொழிலாளர் குழந்தைகளில் அதிக மதிப்பெண் பெறும் குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டு வருகிறது. அதேபோல தொழிலாளர்களின் மனமுற்ற குழந்தைகளுக்கு செயற்கை உறுப்புகள் மற்றும் உதவி வழங்கும் திட்டம் ஆகியவை செயல்பட்டு வருவதுடன் இத்திட்டத்தின் நிதி பல லட்சம் ரூபாய்களாக உயர்ந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

குறிப்பாக செங்கை மாவட்டத்திலுள்ள பட்டாபிராமம் உள்ள சதர்ன் ஸ்ட்ரக்சுரல்ஸ் தொழிற்சங்கத்தின் தலைவராகப் பொறுப்பேற்றிருந்த போது ஓர் மூத்தரப்பு ஒப்பந்தம் அமலில் இருந்த போதே புதிய ஊதிய உயர்வினைப் பெற்றுத் தந்ததோடு மட்டுமல்லாமல் சிப்பந்திகளின் ஓய்வு பெறும் வயதை 55-லிருந்து 58 ஆக உயர்த்தி பெற்றுத் தந்திருக்கிறோம்.

அம்பத்தூர் தொழிற்பேட்டையிலுள்ள ஒமேகா கேபிள்ஸ் தொழிற்சங்கத்தின் பொறுப்பேற்றபிறகு தொழிற்சாலை பல்வேறு இடையூறுகளினால் லே ஆப் விடப்பட்டிருந்ததை நீக்கி தொழிற்சாலை தடையின்றி இயங்க வழி வகை செய்துள்ளோம்.

பிரிட்டானியா நிறுவனத்தில் பொறுப்பேற்றிருந்த போது ஓர் முத்தரப்பு ஒப்பந்தம் அமலில் இருக்கும் போது இன்செண்டிவ் திட்டம் மூலம் ஊதிய உயர்வினை பெற்றுத் தரப்பட்டது.

மார்ஷல் தொழிற்சங்கத்தின் பொறுப்பினை தொமுச பேரவையிடம் இருந்து கைப்பற்றிய பிறகு பல்வேறு குறைபாடுகள் நீக்கப்பட்டது கேண்டீன் வசதிகள் செய்யப்பட்டன.

மெட்ராஸ் ரேடியேட்டர்ஸ் சங்கத்தின் பொறுப்பில் இருந்த போது சிறப்பான ஓர் பொது ஒப்பந்தம் போடப்பட்டு அதிகமான அளவு ஊதிய உயர்வினை பெற்றுத்தந்ததோடு மட்டுமல்லாமல் இறந்த தொழிலாளர்களின் குடும்பத்தினருக்கு நிதி வழங்கும் திட்டம் கொண்டு வந்து ரூபாய் 10 ஆயிரம் வழங்கப்பட்டது.

டபிள்யு எஸ் இன்சுலேட்டர்ஸ் தொழிற்சங்கத்தில் பொறுப்பேற்ற பிறகு 20 சதவிகித போனஸ் ஒப்பந்தம் போடப்பட்டது.

டெஸ்பாடுல்ஸ் தொழிற் சங்கத்தில் பொறுப்பேற்ற பிறகு கடந்த 8 ஆண்டுகளாக தொழிற்சங்கமே இல்லாத நிலையைப் போக்கி அண்ணா தொழிற் சங்கம் உருவாக்கப்பட்டு சிறப்பான பொது ஒப்பந்தம் போடப்பட்டு கணிசமான ஊதிய உயர்வு பெறப்பட்டது.

75 நாட்களாக மூடப்பட்டிருந்த கல்பனா லேப்ஸ் என்ற நிறுவனத்தில் இயங்கி வரும் அண்ணா தொழிற்சங்கத்தின் சார்பில் வேலை நிறுத்தம் நீக்கிக்கொள்ள பாதிக்கப்பட்ட தொழிலாளிக்கு மீண்டும் வேலை வாய்ப்பு பெறப்பட்டதோடு அல்லாமல் அந்த தொழிலாளிக்கு சம்பளமும் பெற்றுத்தரப்பட்டது.

இதுபோல எண்ணற்ற தொழிலாளர்களுக்கு நன்மைகளை தமிழகத்தில் செய்து வருவதற்கு வாய்ப்பினை நல்கிய முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவருக்கு இதயங்கனிந்த நன்றியினை காணிக்கையாக்குகிறேன். செங்கை மாவட்ட தொழில் மலர் சிறப்புற வெளியாகி தொழில் துறைகளுக்கும் தொழிலாளர்களுக்கும் பல்வேறு நன்மைகளை பயக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# புரட்சித்தலைவரின் புதுமைத் திட்டம்

தமிழ்நாடு குழாய்க் கிணறுகள் கழகம் நலிவுற்ற தொழிலாளர்களுக்கும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த சிறு விவசாயிகளுக்கும் உதவும் பொருட்டு தோற்றுவிக்கப்பட்டது. இதன் அடிப்படையில் தமிழகத்தில் 179 கிணறுகள் ரூபாய் 1.6 கோடி முதலீட்டில் அமைக்கும் திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

இதனால் சிறு விவசாயிகள் அவர்களுக்கு இருக்கின்ற ஒரு ஏக்கர் இரண்டு ஏக்கர் நிலங்களில் கிணறுகள் அமைத்தோ அல்லது ஆழ்குழாய் கிணறுகளை அமைத்தோ விவசாயம் செய்வதற்கு பொருளாதார சூழ்நிலை இடம் கொடுக்காத காரணத்தால் அவர்களுக்குத் தேவையான அத்தனை வேலைகளையும் தமிழ் நாடு குழாய் கிணறுகள் கழகம் ஏற்று அவர்களுக்காக பணியாற்றிவருகிறது. இப்படிப் போடப்படும் ஆழ்குழாய் கிணறுகளுக்கு மின்சார இணைப்பு கொடுப்பதற்கு முன்னுரிமை தந்து மின்சார கட்டணமும் இல்லாமல் விவசாயிகளுக்கு சலுகைகளை மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்கள் வழங்கியிருக்கிறார்கள்

இந்த அடிப்படையில் தான் செங்கல்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் வட்டத்தில் கூரம்பாக்கம் கிராமத்தில் 2 ஆழ் குழாய் கிணறுகள் அமைக்கப்பட்டு 22 விவசாயிகள் சுமார் 27.92 ஏக்கர் நிலத்தில் விவசாயம் செய்கிறார்கள். இதனுடைய மொத்த செலவு 1.33,000 இதில் பாதி மான்யமாகத் தரப்பட்டு இருக்கிறது மீதி கடனாக அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகளிலிருந்து கொடுக்கப்படுகிறது இதுவரை அவர்கள் தனியார்களிடம் தண்ணீருக்காக தண்ணீர் வாரம் செலுத்தி அதாவது ஒரு ஏக்கருக்கு 2½ மூட்டை நெல் தண்ணீர் வாரமாக கொடுத்திருக்கிறார்கள். இதனால் அவர்கள் எந்த பயனும் பெறாமல் மிகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இன்று நல்ல முறையில் விவசாயம் செய்து அதனால் நல்ல பலன்பெற்றிருக்கிறார்கள். இந்த கூரம்பாக்கம் விவசாய சங்கம் தமிழ்நாட்டுக்கே முன்னோடியாக செயல்பட்டுக்கொண்டிருக்கிறது இந்தத் திட்டத்தை தமிழகத்தில் புகுத்திய பெருமை மாண்புமிகு இதயதெய்வம் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களையே சாரும்.

மேலும் தமிழ்நாடு குழாய் கிணறுகள் கழகம் மத்திய அரசு, மாநில அரசு நிதி உதவி பெற்று ஆழ்துளை கருவிகள் வாங்குவதற்காக ரூபாய் 116 லட்சம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் வழங்கினார்கள் இதன் மூலம் இன்று சென்னை மாநகரத்தில் குடிநீர்ப் பிரச்சினையைத் தீர்க்கும் பொருட்டு தாமரைப்பாக்கம் பஞ்சட்டி போன்ற பகுதிகளில் சென்னை பெரு நகர குடிநீர் வடிகால் வாரியத்திற்காக குழாய் கிணறுகள் அமைக்கும் பணியை செய்து வருகிறது. மேலும் குடிநீர் பிரச்சினையைத் தீர்க்கின்ற வகையில் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் தென்னாற்காடு மாவட்டத்தில் குடி தண்ணீருக்காக ஆழ் குழாய் கிணறுகளை அமைக்கும் பணியை ஒதுக்கி ஆணையிட்டார்கள். அதன்படி 76 குழாய் கிணறுகள் 6-ம் மாத காலத்தில் முடிக்கப்பட்டு துறையின் பாராட்டைப் பெற்றிருக்கிறது

தமிழ்நாடு குழாய்கிணறுகள் கழகம் கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்யப்பட்ட காரணத்தால் வருவாய் ஈட்டி லாப கணக்கு காட்ட வேண்டிய சூழ்நிலையில் உள்ளது அதன் காரணமாக மற்ற அரசு நிறுவனங்களிலிருந்து வேலைகளை பெற்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறது அதன் படி சென்னை மாநகராட்சி 100 கழிப்பிடங்களுக்கு ஆழ் குழாய் கிணறுகள் அமைக்கும் பணியினையும் சிறைச்சாலைகளில் குடி தண்ணீர் வழங்குவதற்காக 158 வேலைகளையும் தமிழ் நாடு சுற்றுலா கழகத்திற்கு தேவையான ஆழ் துளை கிணறுகள் அமைக்கும் பணியினையும் மற்றும் பட்டுப்பூச்சி வளர்க்கும் துறைக்காக அந்த வேலைகளையும் தமிழ் நாடு குழாய் கிணறுகள் கழகம் இந்த ஆண்டில் செய்து வருகிறது.

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் சுமார் 30 லட்சம் செலவில் சிறு விவசாயிகளுக்கு முழு மான்யமாக வேலைகளை இந்தக் கழகம் முடித்துக் கொடுத்திருக்கிறது தஞ்சை மாவட்டத்தில் சுமார் 4 கோடி செலவில் விவசாயிகளுக்கு குழாய் கிணறுகள் அமைக்கும் பணியை அரசு கழகத்திடம் ஒப்படைக்க இருக்கிறார்

தமிழகத்தில் மானாவாரியாக உள்ள நிலங்களில் நிலத்தடி நீர் இருக்கின்ற இடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கு இருக்கின்ற சிறிய பெரிய விவசாயிகளுடன் அடைகின்ற வகையில் ஆழ்குழாய் கிணறுகள் அமைத்து விவசாயிகளிடமிருந்து தண்ணீர் கட்டணத்தை மட்டும் பெற்றுக்கொண்டு மற்ற எல்லா பராமரிப்பு நிர்வாக செலவுகளையும் தமிழ்நாடு குழாய் கிணறுகள் கழகமே அரசு உத்தரவாதத்தின்படி தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளிடமிருந்து இதற்கான முதலீட்டை கடனாக பெற்று தண்ணீர் தீர்வையாக வசூலிக்கப்படுகின்ற தொகையிலிருந்து அந்தக் கடனை திருப்பி செலுத்த விவசாயிகளுக்கு கடன் சுமை இல்லாமலும் மற்ற பராமரிப்புச் செலவுகள் இல்லாமலும் முழுக்க முழுக்க எல்லா பொறுப்புகளையும் தமிழ நாடு குழாய் கிணறுகள் கழகமே ஏற்றுக்கொள்கின்ற திட்டத்தை தமிழ்நாடு அரசு பரிசீலித்து அனுப்பியிருக்கிறது இது போன்ற புதுமையான திட்டங்களை மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் ஆட்சியில் விவசாயிகள் பெறுகின்ற நல்லவாய்ப்பினை பெற்றிருக்கிறது

மாண்புமிகு புரட்சித் தலைவரின் அன்பான ஆணைகளாலும் அவரது சீரிய யோசனைகளாலும் இன்று லாபம் ஈட்டுகின்ற நிலையை இக்கழகம் பெற்றுள்ளது இந்தக் கழகத்தின் வேண்டுகோளை பொதுமக்களின் சார்பாக நான் அவரிடத்தில் வைக்கின்றபோது அதை அன்போடு பரிசீலித்து அதற்கான உத்தரவுகளைவழங்கி இந்த நாட்டு மக்களுடைய பிரச்சினைகளை தீர்த்து வைத்திருக்கிறார்கள்.

1986-87-ம் ஆண்டு ஜூன் மாதம் வரை சுமார் மூன்று லட்சம் ரூபாய் லாபமாக பெற்றுள்ளது. மேலும் 1987-88-ம் ஆண்டில் சுமார் 10 லட்சம் ரூபாய்க்கு மேல லாபம் ஈட்டும் நிலையிலேயே கழகம் உள்ளது. தற்போது தமிழகத்தில் தமிழ் நாடு குழாய் கிணறுகள் கழகம் ஏறக்குறைய 10 கோடி ரூபாய்க்கான வேலைகளை செய்து கொண்டிருக்கிறது இந்த அளவிற்கு தமிழ் நாடு குழாய் கிணறுகள் கழகம் லாபம் ஈட்டுவதற்கான வாய்ப்பினை பெற பல ஆணைகள் வழங்கிய தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு கழகத்தின் சார்பாகவும் விவசாய பெருமக்களின் சார்பாகவும் என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்

**கோளத்தூர் கோதண்டம்**
தலைவா தமிழ்நாடு குழாய்க் கிணறுகள் கழகம்
சென்னை-28



### பத்தாண்டு காலத்தில் முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு...

- ★ பேரூராட்சிகளில் பணிபுரியும் செயல் அலுவலர் பதவிக்கு பேரூராட்சிப் பணியாளர்கள் மட்டுமே நியமனம் செய்யப்பட்டனர்.
- ★ பேரூராட்சிப் பணியாளர்களை அரசு ஊழியர்களாக அறிவிக்கப்பட்டது.

-நன்றி:- தமிழ்நாடு அரசு அலுவலர் கழகம் (சி மற்றும் டி பிரிவு)